ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பஞ்சமபக்ஷ சததூஷணீ


இயற்றியவர்

&

கிடைக்குமிடம் :—

'விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷகர்'

'ஸ்ரீதத்வ நிர்த்தாரகர்'

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி,

(ஸுதர்சனர்)

[ஆசிரியர் ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'']

3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 620017.


---


ஸ்ரீ ஈ. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.

டிரஸ்டிகள் :—

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A., B.L., அட்வகேட்,

S. ராம அய்யங்கார், B.Sc., B.L., அட்வகேட்.

---

விலை ரூ. 10] 1998 [தபாற்கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



Sri:

Srimathe Ramanujaya Nama:



☎: 50119 (STD. 04635)

**Sri Vanamamalai Mutt**

**Nanguneri - 627 108.**

Srimath Kaliyan Vanamamalai Ramanuja Jeer Swami

Place : **NANGUNERI**
Date : 23.03.98



# இருவீறுடை விருதுகள்

அன்பார்ந்த ஆஸ்திகப் பெருமக்களே!

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஸ்ரீ ஸுதர்சனர் ஆற்றியுள்ள அரும்பணிகள் மிகச் சீரியவை. கடந்த ஐம்பது வருடங்களாக ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு மத ஸ்தாபானார்த்தமாகவும், ப்ரதிபக்ஷிதுர்வாத நிரஸனார்த்த மாகவும் ஸ்ரீஸுதர்சனர் ஆற்றி வந்திருக்கும் தொண்டுகள் அளவற்றவை. பல்லாயிரக் கணக்கான பக்கங்களில் பூர்வாசார்ய திவ்யக்ரந்தங்களைப் பதிப்பித்திருப்பதோடு பற்பல பூர்வாசார்ய க்ரந்தரத்னங்கட்கு எளிய நடையில் விவரணமும் எழுதி வந்துள்ளார். திவ்யப்ரபந்தங்கட்குப் பூர்வாசார்யர்களது நிகரற்ற வ்யாக்யானங்களைப் பிரமாணத் திரட்டுடன் பதிப்பித்தும், ப்ரஸ்தான த்ரயமான உபநிஷத் ப்ரஹ்மஸூத்ர பகவத்கீதைகட்கும், ரஹஸ்யக்ரந்தங்கட்கும் எளிய தமிழ்நடையில் விவரணம் எழுதியும் அவர் ஆற்றியிருக்கும் அருந்தொண்டு இந்த நூற்றாண்டில் வேறு

எவருமே ஆற்றவில்லை எனக் கூறிடின், இது மிகைபட மொழிதல் ஆகவே ஆகாது.

அண்மைக் காலத்தில் ஸகல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகட்கும், திருவுள்ளங்கட்கும் விருத்தமாக "**விசிஷ்டாத்வைத மதத்தில் இரு ப்ரம்மங்கள்**" என்ற துர்வாதத்தைச் சிலர் செய்திட, தத்துவமுணர்த்தும் சீரிய பாங்கினில் ஆணித்தரமாய்ப் பிரமாணங்கள் காட்டி "**ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்**" என்ற நூலின் வாயிலாக, துர்வாதத்தை வேரறச் செய்திட்ட பெருமை ஸ்ரீஸுதர்சனரைச் சாரும்.

இம்மஹநீயர் ஸ்ரீமதுபயவே. புத்தூர் க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி நூறாண்டு நோய் நொடியின்றி வாழ்ந்து மேலும் மேலும் தமது சீரிய தொண்டினைப் புரிந்திட நாம் ஸ்ரீவரமங்கை மணாளன் ஸ்ரீதெய்வநாயகன் திருவடித் தாமரையிணையினில் மனமாரப் பிரார்த்திப்பதோடு, அன்னார்க்குப் பரமப்ரேமத்துடன், "**விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷகர்**" "**ஸ்ரீதத்வ நிர்த்தாரகர்**" என்ற இரு விருதுகளையும் அளித்து மகிழ்வெய்துகிறோம்.

(ஸ்ரீகலியன் வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி)



ஸுதர்சனர் ஸ்ரீ.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி

# பஞ்சமபக்ஷ சததூஷணீ

ஸ்ரீதத்வ விஷயே ஸ்ரீமத்₃ வேதா₃ந்தாசார்ய த₃ர்ஶிதா: ।
பஞ்ச பக்ஷா: ச்சது:ச்லோகீ பா₄ஷ்யே தேஷு ஹி பஞ்சம:॥

அர்வாசீநைஸ்து வித்₃வத்₃பி₄ர்யதே₂ச்சாகாமம்ஸுவிஸ்த்ருத: ।
ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃மாநாநாம் விருத்₃த₄ஸ்ஸஇதித்₄ருவம் ॥

ஸுத்₃ருட₄ம் ஸர்ஸ்த₂ாபயிதும்தத்பக்ஷஶததூ₃ஷணீம் ।
ஸ்ரீக்ருஷ்ணரசிதாமேநாம் ஸேவந்தாம் ஸாத்விகாஜநா: ॥

[பிராட்டியின் ஸ்வரூபத்தைப்பற்றித் தம் காலத்தில் நிலவிய ஐந்து பக்ஷங்கள் ஸ்ரீமத்₃வேதா₃ந்ததேசிகரால் சது:ச்லோகீ பா₄ஷ்யத்தில் காட்டப்பட்டன. அவற்றில் ஐந்தாவது பக்ஷம் பிற்காலத்திலிருந்த சில வித்₃வான்களால் தம் மனம் போன படி விரிவுபடுத்தப்பட்டது. அப்பக்ஷம் ஶ்ருதி ஸ்ம்ருதி முதலான ப்ரமாணங்களுக்கு முரணானது என்று, என்றும் மிகவுறுதியாக நிலைநிறுத்துவதற்காக ஸ்ரீக்ருஷ்ணதாஸ ரால் இயற்றப்பட்ட இந்தப் பஞ்சமபக்ஷஶததூ₃ஷணியை ஸாத்விக ஜனங்கள் அனுப₄விப்பார்களாக.]

## வேதவாக்யங்கள்

1. "ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீத் ஏகமேவாத்₃விதீயம்" 'ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேசாந:' என்று நிமித்த உபாதா₃ந ஸஹகாரி ரூபமான மூவகைக்காரணமுமாய் இருக்கும் ப்₃ரஹ்மம்ஒன்றே என்று முழங்கும்பலபல காரணவாக்யங்கள் அத்தகையகாரணம் ஒரு மிது₂நம் என்று கூறும் பஞ்சமபக்ஷத்தைத் தலையெடுக்க முடியாதபடி தள்ளுகின்றன. [ விவி 4]

2. 'பரமாத்மாவுக்கு ஒத்தவரும் மிக்கவரும் இல்லை' 'அனைவர்க்கும் மேலான ஸர்வேஶ்வரன் ஒருவனே' 'உலகிற்கு அரசன் ஒருவனே' "அவன் நாராயணனே. அவனே பரப்₃ரஹ்மம், பரதத்வம், பரஞ்ஜோதி, பரமாத்மா" முதலான நூற்றுக்கணக்கான வேத₃வாக்யங்கள் இரண்டு பரப்₃ரஹ்மங்கள்உளஎன்னும்பஞ்சமபக்ஷத்தை விலக்குகின்றன.[விவி4]

3. பிரம்மம் ஒன்றை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகும் என்று முழங்கும் பலபல வேத₃வாக்யங்கள் மிது₂னத்தை அறிந்தால்தான் அனைத்தையும் அறிந்ததாகும் என்னும் பஞ்சம பக்ஷத்தைப் பதறியோடச்செய்கின்றன. [வி. வி. 5]

4. புருஷஸூக்தம் பரமபுருஷனுக்கு ஜகத் காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் முதலான அனைத்தையும் சொல்லி "ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" என்று பிராட்டிமாரைப் பத்தினிகளாகக் காட்டுவதன் மூலம் அவனுடைய செயல்களில் பத்தினிகளாக இருக்கும் இவர்களுக்கு அப்ரதாநமான அந்வயமே உண்டு என்று உணர்த்திற்று. இதனால் இருவரும் துல்யமான ஈஶ்வரர்கள் என்று கூறும் பஞ்சமபக்ஷம் பதர் எனக்காட்டப்படுகிறது. [வி. வி. 24. 25]

5. கௌஷீதகீ உபநிஷத்தில் பர்யங்கவித்யையில் "ஸ்ரீ ருபபர்ஹணம் தஸ்மிந் ப்ரஹ்ம ஆஸ்தே" [ஸ்ரீதேவி ப்ரஹ்மத்தின் திருவடிக்கு அணையாக இருக்கிறாள். அதில் பரஹ்மமான பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான்] என்று எம்பெருமானையே ப்ரஹ்மமாகவும், ஸ்ரீதேவியை அவனுடைய திருவடிக்கு அணையாக இருப்பவள் என்றும் காட்டுகையாலே ஸ்ரீதேவியை ப்ரஹ்மமென்றோ எம்பெருமானுக்குத் துல்யமான ஈஶ்வரியென்றோ கூறும் பஞ்சமபக்ஷம் தூரத்தில் தள்ளப் பட்டது. [வி, வி. 25]

6. "அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:" 'அந்த:ப்ரவிஷ்ட:ஶாஸ்தா ஜநாநாம்' முதலான வேதவாக்யங்கள் எம்பெருமான் தன்னையொழிந்த அனைத்தையும் வியாபித்திருக்கிறான் என்று முழங்குகையில், எம்பெருமான் பிராட்டியை வியாபிக்க முடியாது, நியமிக்க முடியாது என்று கூறும் பஞ்சம பக்ஷம் அதமபக்ஷம் என்று விளங்குகிறது. [ஸ்ரீ 27]

7. "ஆநீதவாதம் ஸ்வதயா ததேகம்" [ஸ்வதா எனப் படும் பிராட்டியோடு கூடியதாகவே ஒன்றான பரம்பொருள் படைப்புக்காலத்தில் விளங்கிற்று] 'ஶ்ரத்தயா தேவோ தேவத்வமஶ்நுதே' [ஶ்ரத்தா எனப்படும் பிராட்டியாலே தேவனான எம்பெருமான் தேவத்தன்மையை அடைகிறான்.] என்னும் வேத வாக்யங்களில் பிராட்டி சொல்லப்படுவதாகக் கொண்டாலும் அவளுக்கு அப்ராதாந்யமே தேறும் என்று தேசிகன் நிர்ணயித்திருக்கையாலே இந்த வாக்யங்களைக்கொண்டு ஐந்தாவது பக்ஷத்தை ஸாதிக்க நினைப்பது பகற்கனவேயாகும். [ஸ்ரீ 92—94]

8. "ஈஶ்வரீம் ஸர்வபூ₄தாநாம்" என்னும் வேதவாக்யத்தில் 'ஸர்வபூ₄தாநாம்' என்று பிரித்து எடுத்திருக்கையாலே 'ஈஶ்வர பத்நீ' என்றும் பொருள்கொள்ள முடியாதானாலும், "அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணு பத்நீ" [விஷ்ணுவுக்குப் பத்தினியாக இருப்பதாலன்றோ இவள் உலகுக்கு ஈஶ்வரியாக இருக்கிறாள்.] என்னும் வேதவாக்யத்தையொட்டியே அந்த வேதவாக்யத்திற்கும் பொருள்கொள்ள வேண்டும் என்று தேசிகன் கல்வெட்டாக நிர்ணயித்திருக்கிறபடியால் 'ஈஶ்வரீம் ஸர்வபூ₄தாநாம்' என்னும் வேத வாக்யத்தைக்கொண்டு பிராட்டியை முக்₂யேஶ்வரி என்றுகூறும் ஐந்தாவது பக்ஷம் அடியோடு தகர்க்கப்படுகிறது.

## ஸ்ம்ருதிகள்

9. எல்லா ஸ்ம்ருதிகளிலும் "நாராயணன் பரப்₃ரஹ்மம், உலகிற்கு மூவகைக்காரணன்" என்று சொல்லப்படுகிற தேயொழிய பிராட்டிக்கு அத்தகைய பெருமையைச்சொல்ல வில்லை. உதாரணமாக ஸ்ம்ருதிகளில் தலைமை பெற்ற மநு ஸ்ம்ருதியின் தொடக்கத்தில் "நாராயணனாகிற பரமாத்மா தன் சரீரத்திலிருந்து தானே ஸங்கல்பித்து உலகைப் படைத்தான்" என்று கூறுகிறது. இவ்வண்ணமாக ஸ்ம்ருதிகளின் கருத்துக்கும் முரணானதாகையாலே பஞ்சமபக்ஷம் அடியோடு விலக்கத்தக்கது. [வி. வி. 5]

## இதிஹாஸங்கள்

10. சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லும் இதிஹாஸ ஶ்ரேஷ்ட₂மான ஸ்ரீராமாயணத்தில் ராவணவதத்திற்குப் பிறகு பிரம்மா ராமனைப் பார்த்து 'நீயே நாராயணனாகிற தேவன். உலகனைத்தும் உனக்குச் சரீரம்" என்று கூறுகையாலே உலகனைத்தும் இருவருக்கும் ஶரீரம் என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் தள்ளத்தக்கது. [வி. வி. 5]

11. ஸ்ரீராமாயணத்தில் திவ்ய தம்பதிகள் இருவருமே ராமபிரான் ஸூர்யனைப்போலே விசேஷ்யமானவன், ஸீதை அவனது ஒளிபோலே விசேஷணமானவள் என்று கூறியிருக்கையால் இருவரும் துல்யமானவர்கள் என்று கூறும் பஞ்சமபக்ஷம் புறக்கணிக்கத்தக்கது. [வி. வி. 5]

12. "தத்தஸ்ய ஸத்ருசம் பவேத்" என்று தன்னை ரக்ஷித்துக்கொள்ளவும் ராமனுக்கு அத்யந்த பரதந்த்ரையான தனக்குத் தகுதியில்லை என்று பிராட்டி கூறியதோடல்லாமல், பத்துமாதம் சிறையிருந்து அதை அநுஷ்டித்தும் காட்டினாள். ஒரு வண்ணான் ஏதோ சொன்னான் என்பதற்காக அவளை இரண்டாவது தடவை ஸ்ரீராமபிரான் பிரித்தபோது அப்பிரிவிலும் பொறுமையுடனிருந்து தன் பாரதந்த்ரியத்தை நிலைநாட்டினாள். பூமியில் மறைந்த மூன்றாவது பிரிவிலும் தான் பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷபூதை என்பதை உலகறிய சபதம் செய்து நிலைநாட்டிவிட்டே சென்றாள். இத்தகைய பிராட்டிக்கு ஸ்வாதந்த்ரியமே ஸ்வரூபம், ரக்ஷித்வம் கௌணம் என்று கூறும் பஞ்சம பக்ஷம் ப்ராமாணிகர்களால் புறக்கணிக்கத்தக்கது. [வி. வி. 5, ஸ்ரீ 24 25]

13. "வனவாஸத்தின்போது கொடிய வனவிலங்குகளைப் பார்த்தபோதிலும், ராமனுடைய தோளை அண்டைகொண்டிருக்கையாலே பிராட்டி அவற்றைக்கண்டு பயப்படவில்லை" என்று வால்மீகி கூறுகையாலே பிராட்டி தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ள முயன்றதேயில்லை என்று விளங்குகிறது. இதுவும் ஐந்தாவது பக்ஷத்தை அடியோடு தள்ளுகிறது. [ஸ்ரீ 5, 6]

14. தூதுபோனவன் ஏற்றம் சொல்லும் மஹாபாரதத்திலும் பஞ்சபாண்டவர்கள் முதலானவர்களை ரக்ஷிப்பது முதலான செயல்களைத் தானே முன்னின்று செய்து தன் நிரபேக்ஷ உபாயத்தன்மையைக் கண்ணன் காட்டுகிறான். வனவாஸத்தில் பாண்டவர்கள் சரணம் பற்றும்போது புருஷகாரத்தை முன்னிட வேண்டும் என்பதற்காகக் கண்ணன் சத்யபாமைப் பிராட்டியோடு அங்கு எழுந்தருளுகிறான். மஹாபாரதம் முழுவதும் தேடினாலும் பிராட்டிக்கு ப்ரஹ்மத்வமோ, எம்பெருமானோடு துல்யமான ஈச்வரத்வமோ, ஸ்வாதந்த்ரியமோ அணுவளவும் காணக்கிடைக்காது. ஆகையால் பாரதத்தாலும் பஞ்சமபக்ஷம் புறக்கணிக்கப்பட்டது. [ஸ்ரீ — 26]

15 மஹாபாரதத்தில் மோக்ஷதர்மம் முதலான பல இடங்களிலும் கீதையிலும் பரமபுருஷனே அனைத்துலகையும்

சரீரமாகக் கொண்ட பரப்ரம்மமாகவும், ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாகவும் முழங்கப்படுகிறான். பிராட்டிக்கு இத்தகைய பெருமைகள் ஒன்று கூடச் சொல்லப்படவில்லை. ஆசையால் பஞ்சமபக்ஷம் மஹாபாரதத்தால் வெகுதூரத்தில் விலக்கப்பட்டது. [வி வி—6]

## புராணங்கள்

16 புராணரத்னமான ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் ஜகத் காரணப் பொருள் எது? என்று தொடக்கத்தில் மைத்ரேயர் கேட்ட கேள்விக்கு, "விஷ்ணுவினிடமிருந்தே உலகனைத்தும் உண்டாகிறது" என்று தொடங்கி, பராசரர் விஷ்ணுவையே மூன்று வகையான ஜகத்காரணப்பொருளாகக் காட்டுகிறாரே யொழிய, பிராட்டியை அப்படி எங்குமே கூறவில்லை. விஷ்ணுவை ப்ரஹ்மம் என்று பல விடங்களில் குறிப்பிட்டது போலே பிராட்டியை ப்ரஹ்மம் என்று ஓரிடத்தில கூடக் குறிப்பிடவில்லை. பாற்கடலைக் கடைந்தபோது பிராட்டிதோன்றிய போதும் அவள் பெருமாளுடைய திருமார்பில் அமர்ந்து அவனுக்கு நெஞ்சுக்கினியவளாய் அடங்கிவிட்டாள் என்று பராசரர் காட்டுகிறாரேயொழிய, பிராட்டியைப் பெருமாளுக்குத் துல்யமாகப்பேசின இடம் எதுவுமேயில்லை. "யதா ஸர்வகதோ விஷ்ணு:" என்று பெருமாளைப் போலவே பிராட்டி எங்கும் நிறைந்தவள் என்று கூறுமிடத்திலும், பாற்கடலில் தோன்றிய பிராட்டி ப்ருகு மஹரிஷிக்குக் க்யாதியிடம் பெண்ணாக எப்படித் தோன்ற முடியும் என்னும் கேள்விக்கு பதிலாக அமைந்ததாகையாலே அவதாரரூபமான வ்யாப்தியையே சொல்ல முடியும். எங்களாழ்வானும் அதையே முக்கியமான பொருளாகக் காட்டியிருக்கிறார். ஸ்வரூப வ்யாப்தியைச் சொல்லுவதாகக் கொண்டாலும் அதிதேசமாகையாலே அமுக்கியமான வ்யாப்தியையே சொல்ல முடியும் என்று எங்களாழ்வான் காட்டுகிறார். இந்த ஸ்ரீஸூக்திகளைச் சிலர் தங்கள் மனம் போனபடி திருத்தியுள்ள விஷயங்கள் ஸ்ரீதத்வ ஸர்வஸ்வத்தில் விரிவாக நிரூபிக்கப்பட்டுள்ளன. மேலும், "நித்யைவைஷா" என்றும் தொடங்கும் இந்த ஸ்லோகத்தில் "விஷ்ணோ: ஸ்ரீ:"

என்று பிராட்டி விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவள் என்று கூறுகையாலே, அவளை ஸ்வதந்த்ரையாகக் கூறும் பஞ்சம பக்ஷம் பராசரராலும் புறக்கணிக்கப்பட்டது. [வி. வி 14. 15, 16 ஸ்ரீ 108...120]

17. பாகவதம் முதலான மற்ற ஸாத்விகபுராணங்களில் எம்பெருமானே ஸர்வாந்தர்யாமியாய் ஸர்வஜகத் காரணனாய் மோக்ஷப்ரதனான பரப்ரஹ்மமாக முழங்கப்படுகிறான். பிராட்டியை அப்படிக் கூறும் ஓரிடம் கூட இல்லை. சிவனுக்குப் போட்டியாக சக்தியைக் கூற சைவத்தில் 'தேவீ பாகவதம்' பிற்காலத்தில் எழுந்தது போலே, இன்று வரை பிராட்டியைப் பரம் பொருளாகக் கூறும் எந்தப் புராணமும் கிடையாது. ஸ்ரீபாகவதத்தில் ருக்மிணியைக் கோபமூட்டி வேடிக்கை பார்க்க எண்ணிய கண்ணன், 'நான் உனக்குத் தக்கவனல்லேன்' என்று சில வார்த்தைகள் சொல்ல, அதைக் கேட்ட ருக்மிணி மூர்ச்சித்து விழுந்து விட்டதாகவுள்ள சரித்திரம் ருக்மிணியின் பாரதந்த்ர்யத்தையும் அநந்யார்ஹத்வத்தையும் தெளிவாகக் காட்டுகிறது. கண்ணனுக்குக் காதல் கடிதம் எழுதும் போதும் "சிங்கத்திற்கு ஏற்பட்ட இரையை நரி கொண்டு போகும்படி விட்டு விடாதீர்" என்று எழுதியதன் மூலம் ருக்மிணி தன்னைப் பரமபுருஷனுக்குப் பரதந்த்ரையான போக்யப் பொருளாக நினைத்தது வெளிப்படுகிறது. நரஸிம்ஹாவதாரத்திலும் சிங்கப்பிரானின் கோபத்தைப்பிராட்டியால் தணிக்கமுடியவில்லை. பிரஹலாதனே தணியச்செய்தான், இத்தகைய பிராட்டியையா பரப்ரஹ்மமென்பது? இவற்றையெல்லாம் கற்றறிந்த புராணவித்வான்கள் பிராட்டியை ஸ்வதந்த்ரையாகக் கூறும் ஐந்தாவது பக்ஷத்தை நினைக்கவும் கூசுவார்கள். [ஸ்ரீ 26]

## பாஞ்சராத்ரம்

18. பாஞ்சராத்ர ஆகமங்களில் ஒன்றான லக்ஷ்மீதந்த்ரத்தில் "ஶரீரம் ச ஹரேரஸ்மி" [லக்ஷ்மீ தந்த்ரம் 50—80]

என்று பிராட்டியே தன்னை எம்பெருமானுடைய சரீரமாகக் குறித்திருக்கிறாள். அத்துடன் எம்பெருமானை "அஹமர்த்தம்" என்று தர்மியாகவும், தன்னை "அஹந்தா" என்று தர்மமாகவும் குறிப்பிட்டு, 'அஹந்தையான தனக்கு ஆதார மாக அஹமர்த்தமான எம்பெருமான் இருக்கிறான்' என்று சொல்லியிருக்கையால் [லக்ஷ்மீ தந்த்ரம் 17—30, 31] பிராட்டி ப்ரஹ்மத்தால் தாங்கப்படும் தத்துவமேயொழிய ப்ரஹ்மமோ ப்ரஹ்மத்திற்குத் துல்யமானவளோ அல்ல என்று விளங்கு கிறது.

எம்பெருமானும் "மச்சேஷ பூதா" என்று பிராட்டியைத் தனக்கு சேஷபூதையாகக் குறிப்பிடுகிறான். உபாயத்வம் தனக்கு லக்ஷணம் என்றும் புருஷகாரத்வம் பிராட்டிக்கு லக்ஷணம் என்றும் வேறு லக்ஷணம் இல்லையென்றும் குறிப் பிடுகிறான். "லக்ஷ்ம்யா ஸஹ ரக்ஷக:" [ல த 28–14] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலும் பிராட்டிக்கு அப்ரதாநாக்ஷணமான புருஷகாரத்வமே உண்டு என்று உணர்த்தப்பட்டது. ஆகை யால் லக்ஷ்மீ தந்த்ரம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை முதலான சில பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் பிராட்டியை எம்பெருமானு டைய இச்சாசக்தியாகக் குறிப்பிட்டு, ஜகத்காரணத்வம் முதலான பெருமைகள் சொல்லப்பட்டிருப்பது வாமதேவர் சிவன் முதலானவர்கள் விஷயத்திற் போலே அந்தர்யாமி யான பரமாத்மாவை நினைத்துச் சொல்லப்பட்டது என்று எளிதில் விளங்கும். ஸ்ரீதேசிகனும் 'இந்த ஸம்ஹிதா வசனங் களைப் பிராட்டியின் பத்தினியாயிருக்கும் தன்மையை அனு ஸரித்துப் பொருள் கொள்ள வேண்டும்' என்று நிர்ணயித் திருக்கிறார். ஆகையால், இந்த ஸம்ஹிதா வசனங்களைக் கொண்டு பிராட்டிக்கு எம்பெருமானோடு துல்யமான ஈச்வரத் வத்தைக் கூறும் ஐந்தாம் பக்ஷம் ஸகல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் முரண் பட்ட தாகையாலே ப்ராமாணிகர் களால் நிரஸிக்கத்தக்கது. [வி. வி 6, 7. ஸ்ரீ 5, 8, 10, 67, 95, 96, 132 133]

## அருளிச்செயல்கள்

**19. ஆழ்வார்கள்** அனைத்துலகையும் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து, தாயிருக்கும் வண்ணமே தன் வயிற்றில் திருத்தி 'வேர் முதலாய் வித்தாய்ப் பரந்து தனி நின்ற கார் முகில் போல் வண்ணன்' [திருவாய் 2—8—10] என்கிறபடியே உலகிற்கு த்ரிவித₄காரணமாயும் இருப்பவன் எம்பெருமானே என்று பல விடங்களில் பன்னிப் பன்னி உரைத்திருக்கின்றனர். பிராட்டியை இப்படி உரைத்த இடம் ஒன்றுகூடக் கிடையாது. நேர்மாறாக "சந்தணி மென்முலை மலராள் தரணிமங்கை தாமிருவர் அடிவருடும் தன்மையானை" [பெரிய திரு 2—10—2] முதலான பல இடங்களில் பிராட்டி ப₄க₃வச்சேஷத்வமே வடிவெடுத்தவள் என்று முழங்கியிருக்கிறார்கள். "ஏறனைப் பூவனைப் பூமகள் தன்னை வேறின்றி விண்தொழத் தன்னுள் வைத்து மேல் தன்னை மீதிட நிமிர்ந்து மண் கொண்ட மால்தனில் மிக்குமோர் தேவும் உளதே" [திருவாய் 2—2—3] முதலான இடங்களில் பிரமருத்திரர்களைப்போலே பிராட்டியையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் அவனே பரம்பொருள் என முழங்கியிருக்கிறார்கள்.

> "தானே உலகெல்லாம் தானே படைத்திடந்து
> தானே உண்டுமிழ்ந்து தானே யாள்வானே"
>
> [திருவாய் 10—5—3]

> "அவனே அகல் ஞாலம் படைத்திடந்தான்
> அவனே அஃது உண்டுமிழ்ந்தான் அளந்தான்"
>
> [திருவாய் 9—3—2]

முதலான பல இடங்களில் ஏகாரமிட்டு முக்₂ய ஜக₃த் காரணத்வம் வேறு எவர்க்கும் இல்லையெனத் தெளிவாகக் காட்டினார் ஆழ்வார். நூற்றுக்கணக்கான பாட்டுக்களில் இப்படி ஆழ்வார்கள் முழங்கியிருக்கும்போது பிராட்டியைப் பேசுகின்ற சிவனைப்போலே பேசுகின்ற பிராட்டியாக்கும் ஐந்தாவது பக்ஷம் ஆழ்வார்கள் திருவுள்ளத்திற்குத் தொலை தூரத்தில் நிற்பது என்பது தெளிவாகிறது.

[வி. வி 24, 25. ஸ்ரீ 5, 6, 7. 9, 70, 71, 74, 139]

பெரிய திருமொழி [6-10] "கிடந்த நம்பி" திருமொழியில் திருமங்கையாழ்வார் ஒவ்வொரு பாட்டிலும் திருவஷ்டாக்ஷரத்தின் பொருளை அநுஸந்தித்து "நமோ நாராயணமே" என்று முடிக்கிறார். அதில் ஒன்பதாம் பாட்டு 'நார' ஶப்தார்த்தத்தை விளக்குவதாகப் பூர்வாசார்யர்கள் நிர்வாஹம். இப்பாட்டில் திருமங்கையாழ்வார்

"பொங்கு புணரிக்கடல் சூழ் ஆடை நிலமாமகள் மலர்மா
மங்கை பிரமன், சிவன், இந்திரன் வானவர்நாயகராய
எங்கள் அடிகள் இமையோர் தலைவருடைய திருநாமம்
.. நமோ நாராயணமே" என்று பிரமன் சிவன் முதலானவர்களைப்போலே ஸ்ரீபூமிதேவிகளும் 'நார' ஶப்தத்தின் பொருளென்றும் இவர்களனைவர்க்கும் நாயகன் எம்பெருமான் என்றும் காட்டியிருக்கிறார். தேசிகன் முதலான எல்லா ஆசார்யர்களும் ஸ்ரீதேவியும் நாரஶப்தத்திற்குப் பொருள் என்று இப்படி ஆழ்வார்கள் அறுதியிட்ட அர்த்தத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். 'நார' ஶப்தத்தின் பொருளான பெரிய பிராட்டியாரை நாராயணனைப்போலே ப்ரஹ்மம் என்றும், அவனுக்கு சமம் என்றும் கூறும் ஐந்தாவது பக்ஷம் ஆழ்வார்களின் திருவுள்ளத்திற்கு அப்பாற்பட்டது என்று விளங்குகிறது. ஆழ்வார்கள் "திருவுக்கும் திரு" [பெரிய திரு 7-7-1] என்று பெரிய பிராட்டியாராலும் ஆஶ்ரயிக்கப்படுபவன் எம்பெருமான் என்றும், "உன் திரு" [திருவாய் 10-10-2] என்று பெரிய பிராட்டியார் எம்பெருமானுடைய செல்வம் என்றும் காட்டியிருக்க, இருவரையும் ஸமயாகக்கூறும் ஐந்தாவது பக்ஷம் அருளிச்செயல் அறிந்தவர்களால் புறக்கணிக்கத்தக்கது என்று விளங்குகிறது.

# ஆளவந்தார்

20. ஆளவந்தார் தம் ஸ்தோத்ரரத்னத்தில் ப₄க₃வத் பரத்வத்தை நிர்ணயம் செய்யும்போது "நாராயண" என்று எம்பெருமானை விளித்து "ஸ்வாபா₄விகமாய் (இயல்வானதாய்) அநவதி₄காதிஶயமான (எல்லையற்ற மேன்மையை உடையதான) ஈஶ்வரத்தன்மை நாராயணன் ஒருவனிடமே வைதிகர்களால் ஏற்கத்தக்கது" என்று காட்டினார். [ஸ்தோ-ரத் 11] மற்றவர்களிடமுள்ள ஈஶ்வரத் தன்மையெல்லாம் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் விளைந்தவையாகையாலே இயல்வானதுமல்ல, அளவுபட்டவையாகையாலே எல்லையற்ற மேன்மையை உடையதுமல்ல என்று இதிலிருந்து தெளிவாக விளங்குகிறது. பிராட்டியின் பெருமையும் இத்தகையதே என்று காட்டுவதற்காக அடுத்ததான 12ம ஶ்லோகத்தில் "க: ஶ்ரீ: ஶ்ரிய:" [மற்ற அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படும் ஶ்ரீதேவியாலும் ஆஶ்ரயிக்கப் படுபவன் யார்?] என்று கேட்பதன் மூலம் பிராட்டியும் தன் ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளுக்காக எம்பெருமானையே ஆஶ்ரயித்திருப்பவள் என்று மிகத் தெளிவாகக் காட்டினார். இதற்கு பா₄ஷ்யம் எழுதும்போது ஸ்ரீதேசிகனும் 'ஸ்வேதரஸமஸ்தை: ஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்த்யர்த்த₂ம் யா ஶ்ரீயதே ஸா ஶ்ரீ:, தஸ்யா அபி தத₃ர்த₂ ஶ்ரயணீய இதி] [எம்பெருமானைத் தவிர மற்ற அனைவராலும் தங்களுடைய ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளுக்காகப் பற்றப் படுகிறவளாகையாலே பிராட்டி ஶ்ரீ: எனப்படுகிறாள்; அப்படிப்பட்ட அவளாலும் தன் ஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளுக்காகப் பற்றப்படுபவன் என்று பொருள்] என்னும் ஸ்ரீஸூக்த பா₄ஷ்யமெழுதிய நாராயணமுனி என்னும் பெரியஜீயர் எழுதிய வ்யாக்யானத்தை மேற்கோளாகக் காட்டி 'ஶ்ரயதே ச பரம் பத₃ம்' [பரமபுருஷனை ஆஶ்ரயித்திருக்கிறாள்] என்னும் ஸ்ரீ ஶப்₃த₃ நிருக்தியையும் காட்டுகிறார். இதிலிருந்து பெருமாளும் பிராட்டியும் துல்யமான

ஈஶ்வரர்கள் என்று சொல்லும் ஐந்தாவது பக்ஷம் ஆள வந்தாராலும் ஶ்ரீஸூக்தபாஷ்யம் எழுதிய பெரியஜீயரா லும் ஶ்ரீவேதாந்த தேசிகராலும் வெகுதூரம் விரட்டப் பட்டது என்று விளங்குகிறது.

21. சது:ச்லோகியிலும் நாலாவது ஶ்லோகத்தில், ''ஶாந்தாநந்த .... யத் ப்ரஹ்மரூபம் ஹரே:'' என்று ஹரி யின் ஸ்வரூபத்தை மிகப்பெரியதாகையாலே ப்ரஹ்ம ஶப்தத்தாலே சொல்லி, இந்த ஶ்லோகத்தின் இறுதியில் ''காடோபகூடாநிதே'' [உன்னால் நன்றாக ஆலிங்கனம் செய்யப்பட்டவை] என்று ப்ரஹ்மத்தைத் தழுவியிருப்ப வளாகப் பிராட்டியைப் பேசுகிறாரேயொழிய, ப்ரஹ்மமாகப் பேசவில்லை. ஆகையால் பிராட்டியை ப்ரஹ்மமாகக் கூறும பஞ்சம பக்ஷம் அறிவாளிகளால் அகற்றத்தக்கது. [வி. வி. 7]

## எம்பெருமானார்

22. எம்பெருமானாரும் ஶ்ரீபாஷ்யத்தில் முதல் ஸூத் ரத்தில் ப்ரஹ்ம ஶப்தத்திற்குப் பொருள் அருளிச் செய்யும் போது புருஷோத்தமனாகவும் ஸர்வேஶ்வரனாகவும் இருக்கும் எம்பெருமான்ஒருவனே ப்ரஹ்மஶப்தத்திற்கு முக்யார்த்தம் என்று அருளினார். பிராட்டிக்குச்சிறிதும் பொருந்தாத 'புரு ஷோத்தம' ஶப்தத்தையும் 'ஸர்வேஶ்வர' ஶப்தத்தையும் ஏவகாரத்தோடு இங்கு இட்டிருப்பதால், பிராட்டியும் பர ப்ரஹ்மம் என்னும் பஞ்சம பக்ஷத்தை அவர் வெகுதூரம் விலக்கி விட்டார் என்று தெரிகிறது. [வி. வி, 8]

23, ஶரணாகதிகத்யத்திலும் ஐந்தாவது சூர்ணையில் எம்பெருமானை விளிக்கும்போது 'பரப்ரஹ்மபூத புருஷோத் தம!'' என்றே அழைக்கிறார் எம்பெருமானார். இதிலிருந்து 'நாரீணாம் உத்தமை'யான பிராட்டியைப் பரப்ரஹ்மமாகக் கூறும் ஐந்தாவது பக்ஷத்தை அவர் நெஞ்சாலும் நினைத் ததில்லை என்பது தெளிவாகிறது. [வி. வி. 8]

24. வேதா₂ர்த்த₂ஸங்க்₃ரஹத்திலும் "ஸர்வேஶ்வரேஶ்வர: பரப்₃ரஹ்ம பூ₄த: புருஷோத்தம: நாராயண:" என்று தொடங்கி, புருஷோத்தமனை நாராயணன் ஒருவனே பரப்₃ரஹ்மம்என்றும், அவன் ஒருவனுக்கே எல்லாப்பொருள் களுமாக தாகிற ஜக₃த்து₃பாத₃ந ஶக்தி உண்டென்றும் முழங்கினர். எனவே பிராட்டியை ப்₃ரஹ்மம் என்று கூறும் ஐந்தாவது பக்ஷம்எம்பெருமானரின் திருவுள்ளத்திற்கு விரோத₄மானது என்று விளங்குகிறது. [வி. வி. 8]

25. எம்பெருமானர் ஸ்ரீரங்க₃க₃த்₃யத்தின் தொடக்கத்தில் "ஸ்வாதீ₄நத்ரிவித₄ சேதநாசேதந ஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்தி பே₄த₃ம்.... பரப்₃ரஹ்ம பூதம் புருஷோத்தமம், ஸ்ரீரங்க₃ ஶாயிநம" என்று 'பரப்₃ரஹ்மமாய் இருப்பவனாய், புருஷோத்தமனாய் இருக்கும் ஸ்ரீரங்கநாதனே மூவகைப்பட்ட சேதநா சேதநங்களுடைய ஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையுடையவன்' என்று அருளிச்செய்கையால் பிராட்டியை மற்றொரு ப்₃ரஹ்மம் என்றும், எம்பெருமானோடு துல்யமான ஈஶ்வரியென்றும், எம்பெருமானால் நியமிக்கப் படாதவள் என்றும் கூறும் பஞ்சம பக்ஷம் எம்பெருமானர் தரிசனத்திற்குப் புறம்பானது என்று விளங்குகிறது. வேதாந்த தேசிகரும் தம பா₄ஷ்யத்தில் எம்பெருமானைத் தவிர்ந்த மற்ற அனைவரும் அவனுக்கு ஶரீரம் என்று இங்கு அழுத்தமாகக் கூறியுள்ளது நோக்கத்தக்கது. [வி. வி. 20]

## கூரத்தாழ்வான்

26 ஸுந்தர பாஹுஸ்தவத்தில்—

யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீஶ்வராணும்
ஐஶ்வர்ய ஹேதுரிதி ஸர்வஜநீந மேதத் ।
ஸ்ரீஸ் ஸேதி ஸுந்த₃ர நிஷேவணதோ நிராஹு:
தப ஹி ஶ்ரிய: ஶ்ரிய முத₃ஹுருத₃ரவாச: ॥ [69]

[எவளுடைய கடாக்ஷம் பிரமன் உருத்திரன் முதலான ஈஶ்வரர்களின் எல்லா ஐஶ்வர்யங்களுக்கும் காரணமானது என்பது அனைவரும் அறிந்ததோ, அந்தப் பிராட்டியும் ஸுந்தரபாஹுவை ஆஶ்ரயித்திருப்பதால் அவளை 'ஶ்ரீ:' என்று சொல்லுகிறார்கள். அப்பெருமானையும் உதாரமான வாக்குகளையுடைய திருமங்கையாழ்வார் ஆளவந்தார் போல்வார் "ஶ்ரிய: ஶ்ரீ:" (திருவுக்கும் திரு) என்று அழைக்கிறார்கள்.] என்று கூரத்தாழ்வானும் பிராட்டி எம்பெருமானை ஆஶ்ரயித்திருப்பது நிருக்தி ஸித்தமாகையாலே இயல்வானது என்றுகாட்டியிருக்க, அதை உபய இச்சா ஸித்தமாக ஆக்கும் பஞ்சமபக்ஷம் ஆழ்வார்கள் ஆசார்யர்கள் திருவுள்ளத்திற்கு முரண்பட்டது என்று விளங்குகிறது.

27. கூரத்தாழ்வான் தமது ஶ்ரீஸ்தவத்தின் முதல் ஶ்லோகத்தில் "எல்லா உலகங்களுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை ஹரியே செய்கிறான்; பரம ப்ரணயியாகையாலே பிராட்டியின் முகக்குறிப்புக்கு வசப்பட்டு அதைச்செய்கிறான்" என்கையாலே உலகுக்கு மூவகைக் காரணமாயிருப்பவன் எம்பெருமான் ஒருவனே என்பது கூரத்தாழ்வான் திருவுள்ளம். ஆகவே பிராட்டியும் உலகுக்கு முக்ய ஜகத்காரணம் என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் கூரத்தாழ்வான் திருவுள்ளத்தோடு முரண்பட்டது என்று விளங்குகிறது. [வி. வி. 9]

28. கூரத்தாழ்வான் ஶ்ரீவைகுண்டஸ்தவத்தில் "இச்சாத ஏவ தவ விஶ்வ பதார்த்த ஸத்தா" [36] [எல்லாப் பொருள்களின் ஸத்தையும் உன் விருப்பத்தாலேயே அமைந்திருக்கிறது] என்று அருளியிருக்கிறார். பிராட்டியின் ஸத்தை எம்பெருமானுக்கு அதீனமல்ல என்ற ஐந்தாவது பக்ஷம் இந்த ஶ்ரீஸூக்திக்கு விருத்தமாகையாலே தள்ளத்தக்கது.

## ஸோமாசியாண்டான்

29. எம்பெருமானுடைய முக்ய சிஷ்யர்களில் ஒருவரான ஸோமாசியாண்டான் பிராட்டியின் ஸ்வரூபத்தைப் பற்றி அருளியிருக்கும் ஷடர்த்த ஸங்க்ஷேப ஸ்ரீஸூக்திகள் ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் ஈச்வர பரிச்சேதத்தில் தேசிகனால் எடுக்கப்பட்டுள்ளன. அதில் அவர் உபய விபூதி சேஷியான பிராட்டி பெருமாளுக்கு சரீரம் என்று மிகத் தெளிவாக அருளியுள்ளார். பிராட்டி எம்பெருமானுக்கு சரீரமல்ல என்று கொள்ளும் ஐந்தாவது பக்ஷம் ஸோமாசியாண்டான் திருவுள்ளத்திற்கும் அவர் ஸ்ரீஸூக்தியை ஆதரித்திருக்கும் தேசிகனுடைய திருவுள்ளத்திற்கும் வெகுதூரத்தில் நிற்பது என்பது தெளிவு [வி – வி 12, 13 14]

## எங்களாழ்வான்

30. ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்கு வ்யாக்யானம் செய்த விஷ்ணுசித்தராகிய எங்களாழ்வான், ''எங்கும் வ்யாபித்திருக்கும் விஷ்ணு எப்படிப்பட்டவரோ அப்படிப்பட்டவளே பிராட்டி'' [வி—பு 1—8—17] என்னும் ச்லோகத்திற்கு வ்யாக்யானம் செய்கையில் முதலில் பிராட்டியின் விக்ரஹ வ்யாப்தியை இந்த ச்லோகம் கூறுவதாகவும், அடுத்தபடியாக, சக்தியினாலே ஸ்வரூபத்தால் வியாபித்திருப்பதைச் சொல்லுவதாகவும் வியாக்யானம் செய்கையாலே 'பிராட்டி முக்யமான ஈச்வரத்வத்தைஉடையவள் அல்லள்'' என்று காட்டினார். ஆகையால் பிராட்டி எம்பெருமானுக்குத் துல்யமான ஈச்வரி என்று சொல்லும் பஞ்சமபக்ஷம் அவர் திருவுள்ளத்துக்கு உகந்ததன்று. [வி—வி—14, 15, ஸ்ரீ 108 முதல் 120 வரை]

31. விஷ்ணுபுராணத்தில் ''நாநயோர் வித்யதே பரம்' [1—8—35] என்னுமிடத்திற்கு வ்யாக்யானம் செய்கையில் ''அநயோ:'' என்னும் ஆருவது வேற்றுமைச் சொல்லை,

''ஆப்யாம்'' என்னும் ஐந்தாவது வேற்றுமைச் சொல்லாக மாற்றிக்கொண்டு வ்யாக்யானம் செய்யவேண்டும் என்று காட்டுகையால் பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் வேற்றுமையில்லை என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் எங்களாழ்வானால் தள்ளப்பட்டதாகிறது. [ஸ்ரீ 80–81]

## பட்டர்

32. பட்டர் ஸ்ரீ ரங்க ராஜஸ்தவத்தில் பல பல ஶ்லோகங்களில், ''எம்பெருமானே இவ்வுலகிற்கு மூவகைக் காரணமாக ஆகின்றான்'' என்று காட்டுகிறார். அவரே ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 2—44 வது ஶ்லோகத்தில் ''ஓர் ஆண் மயிலானது தன் சரீரத்தின் ஒரு பகுதியான தோகையை விரித்துப் பெண் மயிலின் முன்னே ஆடுவது போலே, எம்பெருமான் தன் சரீரத்தின் ஒரு பகுதியான உலகைத் தன் ஸங்கல்பத்தாலே விரித்து பிராட்டிக்கு முன்னே விளையாடுகிறான்'' என்று அருளிச்செய்வதன் மூலம் இவ்வுலகம் எம்பெருமானுக்கு சரீரமேயொழிய பிராட்டிக்கு சரீரமல்ல என்றும், எம்பெருமானுக்கு உள்ள முக்ய ஜகத்காரணத்வம் பிராட்டிக்கு இல்லையென்றும் மிகத்தெளிவாகக் காட்டினார். இதன் மூலம் பெருமாள் பிராட்டி ஆகிய இருவருமே முக்ய ஜகத்காரணம் எனக்கூறும் பஞ்சம பக்ஷத்தை வெகுதூரம் விலக்கினார். [வி–வி 10]

33. ஸ்ரீகுணரத்நகோசம் முதல் மற்றும் நான்காவது ஶ்லோகங்களில் ''சேதநாசேதநங்களைப் படைப்பதான செயலை எம்பெருமானே செய்கிறான்'' என்றும், 'அதை அங்கீகரித்து ஆனந்திப்பதன் மூலம் பிராட்டி அதைப் பயனுடையதாக்குகிறாள்'' என்றும் கூறியுள்ளதன் மூலம் பிராட்டிக்கு, உலகிற்கு மூவகைக்காரணமாயிருக்கையாகிற ஜகத்காரணத்வம் இல்லையென்று தெளிவாகக் காட்டுகிறார் பட்டர். இவற்றை அனுஸரித்துப் பொருள்

கொள்ளும்போது லக்ஷ்மீ கல்யாணமங்களம் ஸ்லோகத்தில் பெருமாளையும் பிராட்டியையும் ஜகத்காரணர்களென்று கூறியிருப்பது பெருமாளுக்கு உள்ள முக்ய ஜகத்காரணத்வத்தையும் பிராட்டிக்குள்ள அமுக்யஜகத்காரணத்வத்தையும் திருவுள்ளத்தில் கொண்டே என்று தெளிவாகத்தேறுகிறது இதனால் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் துல்யமான ஜகத்காரணத்வத்தைச் சொல்லும் பஞ்சம பக்ஷம் பட்டரால் புறக்கணிக்கப்பட்டதென்று விளங்குகிறது. [வி, வி. 9, 23, 24]

34. பட்டர் ஸ்ரீகுணரத்னகோசம் 31 வது ஸ்லோகத்தில், 'ரத்னத்திற்கு ஒளிபோலே பிராட்டி பெருமானுக்கு இயற்கையான உடைமைப்பொருளாயிருக்கிருள்.'' என்று அருளிச்செய்திருக்கிருர். ''பிராட்டி எம்பெருமானுக்கு வசப்பட்டவள் அல்லள், ஸ்வாதந்த்ரியமுள்ளவள்'' என்று கூறும் பஞ்சம பக்ஷத்திற்கு இந்த ஸ்லோகத்தில் பட்டரால் மரணஅடி கொடுக்கப்பட்டுள்ளமை விளங்குகிறது. இந்தஸ்லோகத்தை அநுஸரித்துப் பொருள்கொள்ளும்போது 53-வது ஸ்லோகத்தில் ''யுவயோ:ஸ்வாதந்த்ரியம்'' என்று பெருமாளுக்கும் பிராட்டிக்கும் பொதுவாக ஸ்வாதந்த்ரியத்தைச் சொன்னது பக்தர்களை ரக்ஷிப்பதற்காகப் படாத பாடுபடுவதில் எம்பெருமான் ஸ்வாதந்த்ரியத்தைக் கைக்கொள்ளும் போது இவளும் அதைப் பின் செல்லுகிருள் என்று கூறியதேயாகும். 28-வது ஸ்லோகத்தில் ஸ்வாதந்த்ரியத்தை எம்பெருமானுக்கே உரியகுணமாகக் கூறியது போல் பட்டரோ அல்லது வேறு எந்த ஆசார்யரோ பிராட்டிக்குத் தனியாக ஸ்வாதந்த்ரியத்தைச் சொன்னது இல்லை என்பது குறிக்கொள்ளத்தக்கது. [விவி 21, 22]

35. ஸ்ரீகுணரத்னகோசத்தில் 34-வது ஸ்லோகத்தில் ஸ்ரீபராசரபட்டர், ''ஸ்வாதந்த்ரியம்'' முதலான ஆண்மைக் குறுப்பான குணங்கள் எம்பெருமானிடமும், பர்த்ரு பாரதந்த்ரியம் முதலான பெண்மைக்குரிய குணங்கள் பிராட்டியிடமும் நாம் அநுபவிக்கும்படி அமைந்திருக்கின்றன

என்றே கூறியிருக்கும்போது, பெருமானும் பிராட்டியும் இக்குணங்களைத் தங்களுக்குள் பிரித்துக் கொண்டார்கள் என்று அவப்பொருள் கூறும் ஐந்தாவது பக்ஷம் நல்லோர்களால் அநாதரிக்கத்தக்கது. [வி வி. 22, 23]

36 பட்டர் ஸ்ரீகுணரத்னகோசம் 28 வது ஶ்லோகத்தில், "பிராட்டி எம்பெருமானுக்கு நிருபகையாகையாலே நிருப்யனை அவனைச் சொன்னவிடத்திலெல்லாம் இவளையும் சொன்னதேயாகும்" என்று அருளியிருப்பதையும், அதற்கு மூலமான எம்பெருமானார் வார்த்தையையும் பற்றிக்கொண்டு, நிருப்யத்திற்குஉள்ள தன்மையெல்லாம் நிருபகத்திற்கு வராது என்பதையும் ஆலோசிக்காமல், பெருமானுக்குண்டான ப்ரஹ்மத்வம் ஸர்வாந்தர்யாமித்வம் முதலானவையெல்லாம் பிராட்டிக்குமுண்டு என்று விதண்டாவாதம் செய்யும் ஐந்தாவது பக்ஷம் வித்வான்களால் விலக்கத்தக்கது. [வி. வி. 24]

37. ஸ்ரீபராசரபட்டர் அஷ்டஶ்லோகியில் த்வயத்தின் பொருளை விவரிக்கும் முதல் ஶ்லோகத்தில் "ஸ்ரீ" ஶப்தத்தின் பொருளாக 'நேத்ருத்வம்' என்று 'புருஷகாரத்வமே பிராட்டிக்கு உள்ளது என்று காட்டினர். "மிதுநபரம்ப்ராப்யம்" என்று ப்ராப்யம் பெருமாளும் பிராட்டியுமாகிற இருவருமான சேர்த்தியே எனக்காட்டினர். இரண்டாவது ஶ்லோகத்தில் "ஈஶாநாம் ஜகதாமதீஶதயிதாம நித்யாநபாயாம்ஶ்ரியம் ஸம்ஶ்ரித்ய" [விஷ்ணுவுக்குப் பத்னியாயிருக்கையாலே உலகுக்கு ஈஶ்வரியாயிருப்பவளாய், எம்பெருமானை என்றும் விட்டுப்பிரியாதிருப்பவளான ஸ்ரீதேவியைப ஆஶ்ரயித்து] என்று பிராட்டியைப் புருஷகாரமாக ஆஶ்ரயிப்பதைப் பிரித்துச்சொல்லி,

"ஆஶ்ரயணே சிதாகிலகுணஸ்ய
அங்க்ரீ ஹரே:ஆஶ்ரயே இஷ்டோபாயதயா"

[ஆஶ்ரயிப்பதற்கு உதவும் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌஶீல்யம், ஸௌலப்₄யம் என்னும் குணங்களோடு கூடிய எம்பெருமானுடைய இருதிருவடிகளையும் நான் ப₄க₃வத் ப்ராப்தியாகிற ப₂லனுக்கு உபாயமாகப்பற்றுகிறேன்] என்று அருளிச்செய்வதன் மூலம் உபாயத்வத்தில் பிராட்டிக்கு அந்வயமில்லையென்று மிகத்தெளிவாகக் காட்டினார். 'ஶ்ரியா ச ஸஹிதாய' என்று தொடங்கும் மேல் பகுதியில் கைங்கர்யம் பிராட்டியும் பெருமானுமான சேர்த்தியிலேயே செய்யப்பட வேண்டுமென்று காட்டினார். இதிலிருந்து பிராட்டிக்கு எம்பெருமானுக்குப்போலே உபாயத்வம் உண்டு என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் ப₄ட்டராலே பிடரியைப்பிடித்துத் தள்ளப்பட்டது என்று தெளிவாகத் தேறுகிறது,

38. ப₄ட்டர் ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தில் ''ஸ்ரீத₃:'' [நாமம் 612] என்னும் திருநாமத்திற்கு ''தஸ்யா: ஜீவாது: இத்யர்த₂:; தச்ச்₂ரயணேந ஹி ஸா ஸ்ரீர் நிருச்யதே'' [பெரிய பிராட்டியாருக்கு உயிரளிப்பவன் என்று பொருள். 'ஶ்ரயதே ச பரம் பத₃ம்' (பரமப்ராப்யமான எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கையால் ''ஸ்ரீ:'' எனப்படுகிறாள்) என்கிற நிருக்தியின்படி எம்பெருமானை ஆஶ்ரயித்திருப்பதாலன்றோ அவள் 'ஸ்ரீ:' எனப்படுகிறாள்] என்று பா₄ஷ்யமிட்டு, ''உன்னைப் பிரிந்தால் நானும் ஸீதையும் இல்லையாவோம்'' என்னும இளையபெருமாள் வாக்யத்தைப் பிராட்டியின் இந்த இயல்வுக்கு ப்ரமாணமாகக் காட்டுகிறார். இதிலிருந்து பிராட்டியின் ஸத்தை எம்பெருமானுக்கு அதீனமானது என்பதே ப₄ட்டர் திருவுள்ளம் என்று விளங்குகிறது. ஆகையால் அவர் பஞ்சமபக்ஷத்தை ஆதரித்திருக்க இடமேயில்லை. 'ஸ்ரீஶ:' என்னும் அடுத்த திருநாமத்திற்கு ''ஸ்ரீதேவிக்கும் ஈஶ்வரன்'' என்று பொருள்கொண்டு ஸ்ரீதேவியின் ஸத்தைக்குக் காரணமாயிருப்பவன் என்று கருத்துரைத்து, 'ஸ்ரீதேவியைத் தன்னை நியமிப்பவளாகக்

கொண்டவன்' என்னும் இரண்டாவது பொருளையும் காட்டி, "இவனுடைய எல்லா நிலைகளையும் நிலைநிறுத்துபவளாக இருப்பவள் ஸ்ரீதேவி" என்று கருத்துரைத்து, "பும்ப்ரதா₄ந ஈஶ்வரேஶ்வரீ" [சித் அசித் ஈஶ்வரன என்னும் மூன்று தத்துவங்களுக்கும ஈஶ்வரீ] என்னும் பிராட்டியின் திருநாமத்தையும் ப்ரமாணமாகக் காட்டுகிறார். "ப்ரேமபாரதந்த்ரியத்தால் இவள் எம்பெருமானுக்கும் ஈஶ்வரியாகிறாள் என்பதே இந்த நாமத்திற்குப் பொருள்" என்று சது:ச்லோகீ இரண்டாவது ஶ்லோக பா₄ஷ்யத்தில் தேசிகன் உணர்த்தியுள்ளார். "ஆகையால் பெருமான்பிராட்டியின் ஸத்தைக்குக் காரணம், ப்ரேமத்தாலே அவனும் அவள் சொல்வழி நடப்பான்" என்பது இவ்விரண்டு பொருள்களிலிருந்தும் தேறுகிறது. இது பஞ்சமபக்ஷத்திற்கு எப்படிப் பொருந்துமா? அடுத்த நாமமான "ஶ்ரீநிவாஸ:" என்பதற்குப் பொருள் எழுதும்போது "கற்பகக் கொடிக்குக் கற்பகமரமானது தா₄ரகமாயிருப்பது போலே பிராட்டிக்கு என்றும் தா₄ரகனாயிருப்பவன்" என்று பொருளுரைப்பதன் மூலம் 'பிராட்டியையும் தா₄ரித்து நிற்பவன் எம்பெருமானே' என்று காட்டிப் பஞ்சமபக்ஷத்தைப் புறக்கணித்தார்.

'ஶ்ரீத₄ர:" என்னும் 617 வது திருநாமத்திற்கு பா₄ஷ்யமிடும்போது "ரத்னமானது ஒளியைப்போலவும், புஷ்பமானது மணத்தைப்போலவும், சந்திரன் நிலவொளியைப் போலவும், அமுதம் இனிமையைப்போலவும் பிராட்டியை இயல்வாகவே தா₄ரிப்பவன்" என்று அருளுவதன் மூலம் எம்பெருமானுக்குப் பெருமையை அளிக்கும் பிராட்டி அவனுக்கு இயல்வாகவே உடைமையாயிருப்பவள் என்று த்₃ருஷ்டாந்தங்களையிட்டுக் காட்டினார்; இதன் மூலம் பஞ்சமபக்ஷத்தைப் பிடரி பிடித்துத்தள்ளினார்.

## பெரியஜீயர் என்னும் நாராயணமுனி

**89.** ஸ்ரீபராசரபட்டருக்கும் வங்கிபுரத்துநம்பிக்கும் சிஷ்யரான பெரியஜீயர் என்னும் நாராயணமுனி ஸ்ரீஸூக்தபாஷ்யம் ஒன்று இயற்றியதாக ஸ்ரீதேசிகன் ரஹஸ்ய த்ரயஸாரத்தில் எடுக்கிறார். தேசிகன் காட்டியபடி பெருமாளோடு பிராட்டிக்குத் துல்யமான ஈச்வரத்வத்தைக் கூறும் ஐந்தாவது பக்ஷம் எந்தப்பூர்வாசார்யர்களாலும் தம் நூல்களில் எடுக்கப்படாததைக் கண்டு சிலர் சென்னை ஓரியண்டல் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரியிலிருந்து கோமடம் ரங்கநாதர் என்பவர் எழுதிய ஸ்ரீ ஸூக்த பாஷ்யத்தைப் ப்ரதியெடுத்து அதில் இயற்றியவரின் பெயரை ரங்கநாதமுனி என்று திருத்தி, அதில் ஐந்தாவது பக்ஷத்தைத்தழுவிய பலவாக்யங்களை இடைச்செருகல் செய்து "நஞ்ஜீயர் ஸ்ரீஸூக்த பாஷ்யம்" என்னும் பெயரில் ஒருசுவடியைத் தயாரித்து அதுதிருவஹீந்த்ரபுரத்தில் கடிலநதியில் தங்களுக்குக் கிடைத்ததாகப் பெரும் பொய்யைக்கூறி அதை அச்சிட்டனர். "நஞ்சீயருக்கு நாராயணமுனியென்றோ, ரங்கநாதமுனியென்றோ, பெரியஜீயரென்றோ பெயர் கிடையாது. பட்டரையல்லது அறியாத அவர் வங்கிபுரத்து நம்பியை ஆச்ரயித்திருக்க இடமே இல்லை. ஆகையால் நஞ்ஜீயரை விடப் பெரியவராகையாலே, பெரியஜீயர் என்று தேசிகனால் வழங்கப்பெற்றவராய், நாராயணமுனி என்னும் பெயரையுடையவராய் ஸுதர்சனசதக கர்த்தாவாய் புருஷஸூக்த, நாராயணஸூக்தம் முதலானவற்றுக்கு வ்யாக்யானம் செய்தவராகப் பூர்வாசார்யர்களால் எடுக்கப்படும் கூரநாராயணஜீயரே இவர் என்பது வெளிப்படை. அவருக்கும் ரங்கநாதர் என்றோ ரங்கநாதமுனியென்றோ பெயர்கிடையாதாகையால் இவர்கள் அச்சிட்டிருக்கும் நூல் அவருடையதுமல்ல. மேலும் 20 வது பராவில் தம் ஸ்தோத்ர வ்யாக்யானத்தில் ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளுக்குப்

பிராட்டி எம்பெருமானை ஆஶ்ரயித்திருப்பதாக நாராயண முனி அருளியிருப்பதை நாம் எடுத்துக்காட்டியிருக்கிறோம். ஆகையால் பிராட்டிக்குத் துல்யேஶ்வரத்வத்தைக் கூறும் ஐந்தாவது பக்ஷத்தை நாராயணமுனி தம் ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் சொல்லியிருக்க இடமே இல்லை. நஞ்சீயர் ஸ்ரீஸூக்தபாஷ்யம் செய்திருக்க இடமேயில்லாமலிருக்க, அவர்மேல் ஐந்தாவது பக்ஷத்தை ஏறிடுவதற்காக இப்படி ஒரு க்ரந்தத்தையே கல்பித்த அடாத செயலைச் செய்தது உண்மைக்கும் நேர்மைக்கும் மதிப்பளிக்கும் அனைவராலும் கண்டிக்கத்தக்கது. [வி-வி 27, 28]

## ஸ்ரீதேசிகன்

40. ஸ்ரீதேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் ''ஸ்வஜ்ஞாந ஸ்வேதர ஸமஸ்தத்ரவ்ய ஶரீரகத்வம்'' [தன்னுடைய ஜ்ஞாநமும் தானும் தவிர்ந்த மற்ற எல்லாத்ரவ்யங்களையும் ஶரீரமாகக் கொண்டிருக்கை] என்று ஈஶ்வர லக்ஷணத்தைக் காட்டினார். பிராட்டி ஸர்வேஶ்வரனையும் அவனுடைய ஜ்ஞாநத்தையும் காட்டிலும் வேறுபட்டதொரு சேதந த்ரவ்யமாயிருப்பவள் என்பதை எவராலும் மறுக்க இயலாது. ஆகையால் பிராட்டியும் எம்பெருமானுக்கு ஶரீரமென்றும், முக்யமான ஈஶ்வர லக்ஷணத்தைப் பிராட்டிக்கு தேசிகன் திருவுள்ளம் பற்றவில்லையென்றும், நாலாவது பக்ஷத்தில் சொன்னபடி உபயவிபூதி ஶேஷியாகையாலே பிராட்டி எம்பெருமானுக்கு அடங்கியவளாய் ஈஶ்வர வகுப்பில் சேர்க்கப்படவேண்டியவள் என்றே திருவுள்ளம் பற்றினார் என்றும் விளங்குகிறது. தேசிகன் காட்டிய மற்ற ஈஶ்வர லக்ஷணங்களும் பரப்ரஹ்மமாயிருக்கையாகிற முக்யேஶ்வரத்வம் இவளுக்கு இல்லை என்பதை வலியுறுத்துகின்றன. 'ஸர்வேஶ்வரத்வம்' என்னும் லக்ஷணம் எம்பெருமானைத் தவிர்ந்த மற்றவர்களுக்கே ஈஶ்வரியாய் இருக்கும் இவளுக்குப் பொருந்தாது என்பது வெளிப்படை. 'ஸர்வஶேஷித்வம்' [அனைவர்க்கும் ஶேஷியாயிருக்கை], ஸர்வாதாரத்வம்'

'[அனைவர்க்கும் ஆதாரமாயிருக்கை] என்னும் லக்ஷணங்களும் அப்படியேயாம். 'ஸர்வ பலப்ரதத்வம்'' [எல்லாப் பலன்களையும் அளிப்பவனாய் இருக்கை] என்னும் லக்ஷணமும் பாப கர்மங்களுக்கு அஜ்ஞாதநிக்ரஹையான (கோபம் என்பதையே அறியாதவளான) இவள் தண்டனையாகிற பலனை யளிப்பது இயலாதாகையாலே பிராட்டிக்குப் பொருந்தாது என்பது வெளிப்படை ''ஸ்வத: ஸத்ய ஸங்கல்பத்வம்'' [இயற்கையிலே ஸத்ய ஸங்கல்பத்வத்தை உடையவனாயிருக்கை] என்னும் லக்ஷணமும் எம்பெருமானுடைய நித்ய ஸங்கல்பத்தாலே ஸத்ய ஸங்கல்பையாயிருக்கும் இவளுக்குப் பொருந்தாது 'ஸர்வகார்ய உத்பாதகத்வம்'' [எல்லாக் காரியப்பொருளையும் உண்டாக்குபவராயிருக்கை] என்னும் லக்ஷணத்தாலும் உலகிற்கு மூவகைக் காரணமான எம்பெருமானை முக்யேச்வரனாகவும் அப்ரதாந காரணமான இவளை ஈச்வரகோடியைச் சேர்ந்தவளாகவுமே தேசிகன் திருவுள்ளப்படி கொள்ளமுடியும். 'ஸர்வகர்ம ஸமாராத்யத்வம்'' [எல்லாக்கர்மங்களாலும் ஆராதிக்கத் தக்கவராயிருக்கை] என்னும் லக்ஷணத்தாலும் விசேஷ்யமான எம்பெருமானை முக்யேச்வரனாகவும், விசேஷணமான இவளை ஈச்வர வகுப்பில் சேர்ந்தவளாகவுமே தேசிகன் திருவுள்ளப்படி கொள்ளமுடியும். இனி ''வ்யாபகத்வே ஸதி சேதநத்வம்'' [அனைத்தையும் வியாபித்திருக்கும் சேதநனாயிருக்கை] என்னும் ஒரு லக்ஷணமே முக்யேச்வரனான எம்பெருமானுக்கும் ஈச்வர வகுப்பைச் சேர்ந்த பிராட்டிக்கும் பொதுவான லக்ஷணமாய் அமைகிறது. இந்த ஈச்வரலக்ஷணங்களையும் நாம் இனிக்காட்டப்போகும் நாற்பதுக்கு மேற்பட்ட தேசிக ஸ்ரீஸூக்திகளையும் காணும் நடுநிலையாளர்க்கு தேசிகன் நாலாவது பக்ஷத்தையே கைக்கொண்டவரேயொழிய ஐந்தாவது பக்ஷத்தை அணுவளவும் ஆதரித்தவரல்லர் என்பது விளங்கும்.

41 ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் தேசிகன் ஜ்ஞாநம் ஆனந்தம் முதலான குணங்களில் பிராட்டிக்கும் பெருமாளுக்குமிடையே அத்யந்த ஸாம்யம் உண்டென்றும், ஜகத்காரணத்வம் ஶேஷித்வம் ஶரயத்வம் ப்ராப்யத்வம் ஆகியவற்றில் ஸாம்யமே உண்டென்றும் அருளினர். ஆகையால் ஜகத்காரணத்வம் முதலானவற்றில் தம்பதிகளிடையே வேற்றுமையும் உண்டென்று விளங்கும். ''ஶக்தித்வ வாதஸ்து பத்நீத்வாதிரூபேண விஶேஷணத்வ-அபிப்ராயா:; ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரேஷு ஸமாநலீலதயா ப்ரேரகத்வேந ஸஹகாரித்வ-அபிப்ராயாவா''[பிராட்டிபெருமானுக்கு சக்திஎன்று கூறும் வசனங்கள் பத்னியாகவும் சரீரமாகவும் இருந்து கொண்டு பிராட்டிபெருமானுக்குவிசேஷணமாக இருக்கிறாள் என்னும் கருத்தை உடையவை. எம்பெருமான் ஸ்ருஷ்டி முதலான செயல்களைச் செய்யும் போது அதனால் உண்டாகும் ஆனந்தத்தில் பங்கு கொள்வதன் மூலமும், அவனை அவற்றைச் செய்யும்படி தூண்டுவதன் மூலமும் அவனுக்குத் துணை புரிகிறாள் என்னும் கருத்தை உடையவை என்றும் கொள்ளலாம்] என்று அருளியிருக்கையாலே ''பிராட்டி ஸ்ருஷ்டி முதலானவற்றை நேரே செய்வதில்லை. அவனைத் தூண்டுவது முதலானவற்றைச் செய்வதன் மூலம் அப்ரதாந ஜகத்காரணமாகிறாள்'' என்ற நாலாவது பக்ஷத்தையே தேசிகன் திருவுள்ளம் பற்றுகிறார் என்றுவிளங்குகிறது. பிராட்டியை எம்பெருமானுக்கு விசேஷணமாகவே கூறுகையாலும் இருவரையும் துல்யமாகக்கூறும் ஐந்தாவது பக்ஷத்தை அவர் ஆதரிக்கவில்லை என்று தேறுகிறது. [வி-வி 17. 18]

42. ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் பாஞ்சராத்ர சாஸ்த்திரத்தில் பிராட்டியை வ்யூஹங்கள்போலே எம்பெருமானின் மற்றொரு நிலையே என்று சொல்லியிருப்பதை எப்

படி நிர்வஹிப்பது என்பதைக் காட்டுகையில், அவை அவதார விஷயங்கள் என்று கூறி, ''ஸர்வஸ்ய புகுவதாத்மகத்வேந .....புகுவத்வஸ்துபேதத்வாத்' [லக்ஷ்மியின் அவதாரங்களும் பகவானை அந்தர்யாமியாகக் கொண்டவையாகையாலே அவனுடைய ஒரு நிலையாகவே இருக்கின்றனவாகையாலே ] என்று அருளியிருக்கையாலே எம்பெருமானே பிராட்டிக்கும் அந்தர்யாமியாய் ப்ரகாரியாயிருப்பவன் என்று தேசிகன் தெளிவாக அருளிச் செய்திருக்கிறார். இருவரையும் துல்யமாகக்கருதும் ஐந்தாவது பக்ஷம் இந்த ஸூக்தியாலும் தள்ளப்பட்டதாகிறது. (இந்த இடத்திலேயே பிராட்டி பெருமாளுக்கு சரீரமென்னும் ஸோமாசியாண்டானின் ஷடர்த்தஸங்க்ஷேப ஸ்ரீஸூக்தியை மேற்கோளாக தேசிகன் எடுக்கிறார் என்பது குறிக்கொள்ளத்தக்கது.)

43. தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜனம் ஈச்வரபரிச்சேதத்தில், ''லக்ஷ்ம்யா: ஸமஸ்த சிதசித் ப்ரபஞ்சோ வ்யாப்யஸ்ததி,ஶஸ்ய து ஸாபி ஸர்வம்'' [லக்ஷ்மியால் சேதநாசேதநங்கள் அடங்கிய எல்லா உலகங்களும் வியாபிக்கப்பட்டுள்ளன. அவளுடைய ஈசனான நாராயணனால் இந்த எல்லாவுலகங்களோடு அவளும் வியாபிக்கப்பட்டுள்ளாள்] என்னும் பாஞ்சராத்ர வசனத்தை எடுத்திருக்கிறார். இதனால் பிராட்டியைப் பெருமான் வியாபிக்கவில்லையென்றும் நியமிக்கவில்லையென்றும் கூறும் ஐந்தாவது பக்ஷம் தேசிகனால் அறவேபுறக்கணிக்கப்பட்டமை விளங்குகிறது. [வி. வி. 17]

44. ந்யாயஸித்தாஞ்ஜனம் ஈச்வரபரிச்சேதத்தின் கடைசியில். '' அத:ஸித்தம் அசேஷசிதசித்ப்ரகாரம் ப்ரஹ்மைக: ஸ்ரீமந் நாராயண இதி'' [எல்லாச் சேதநாசேதநங்களையும் ப்ரகாரமாகக் கொண்ட ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே ப்ரஹ்மம்என்று இவற்றிலிருந்து தேறிற்று] என்றுஅருளியுள்ளார் தேசிகன்.

இருவரும் ஸமமான ஈஶ்வரர்கள் அல்லது இருவரும் ப்₃ரஹ்மம் என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் தேசிகனுக்கு அபி₄மதமல்ல என்று இதிலிருந்து விளங்குகிறது. ('ஸ்ரீமந் நாராயண:' என்பது ஸ்ரீதேவியால் நிரூபிக்கப்படும் நாராயணன் என்றே பொருள்படும்.)

45 தேசிகன் சது:ஶ்லோகீ பா₄ஷ்யத்தின் மங்களஶ்லோகத்தில், "சாரீரக ஶாஸ்த்ரங்களின் நாலு அத்தியாயங்களில் முறையே லோகஸ்வாமியாகவும், தடையற்ற எல்லையற்ற மகிமையை உடையவனாகவும், பலன்களைக் கொடுப்பவனாகவும், பலனாயிருப்பவனாகவும் எந்த எம்பெருமான் சொல்லப்பட்டானோ, அவனுக்குத் துணைவியாய் இருப்பவளாய், அவனை அடைவதில் நமக்குள்ள ப₄யத்தைப் போக்குகிறவளான ஸ்ரீதேவியை மெய்ஞ்ஞானியான யாமுன முனி சது:ஶ்லோகியில் துதிக்கிறார்" என்று அருளிச்செய்து, பா₄ஷ்யத்தின் தொடக்கத்திலும், எம்பெருமானே ப்₃ரஹ்ம ஸூத்ரத்தின் நாலு அத்தியாயங்களிலும் அறியப்படுகிறானென்றும், அவனுடைய ஸர்வாதி₄கத்வத்தை வெளிப்படுத்தவே அவனுடைய பத்நியின் பெருமைகளைச் சது:ஶ்லோகியில் ஆளவந்தார் பேசுகிறார் என்றும் தேசிகன் தெள்ளத்தெளிவாக அருளியுள்ளார். ஆகையால், பிராட்டியும் பெருமாளும் துல்யமானவர்கள் என்னும் ஐந்தாவது பக்ஷக்கருத்தைத் தமது வ்யாக்யானத்தின் தொடக்கத்திலேயே தேசிகன் தள்ளியிருக்கிறார் என்று விளங்குகிறது. [வி வி 28 29]

46. 'புருஷோத்தம' ஶப்₃த₃ வ்யாக்₂யானத்தில் "அவதாரேऽபி ஹ்ய ஸௌ — நாரீணாம உத்தமேத்யுச்யதே ।
ஏவமஸ்யா: பதிஸம்ப₃ந்தே₄ந ப்ரகர்ஷ உக்த: ॥" [அவதாரத்திலும் இவள் 'பெண்களுக்குள் தலைசிறந்தவள்' என்று

சொல்லப்படுகிறாள். இப்பதத்தால் இவளுக்கு எம்பெருமானுடைய ஸம்பந்தத்தாலே உண்டான பெருமை சொல்லப்புடுகிறது] என்று வியாக்யானம் செய்கையால், பாரதந்த்ரியத்தை ஸ்வரூபமாகக் கொண்ட ஸ்த்ரீகளுக்குள் தலைமை பெற்றவள் பிராட்டியென்றும், ஸ்வாதந்த்ர்யத்தை ஸ்வரூபமாகக் கொண்ட புருஷர்களுள் தலைமைபெற்றவன் எம்பெருமான் என்றும் அருளிச் செய்கிறார். அவனுடைய ஸம்பந்தத்தாலேயே இவளுக்குப் பெருமை என்றும் அருளிச் செய்கிறார். ஆகையால் ''ஸ்வாதந்த்ர்யமே இவளுக்கு ஸ்வரூபம்; இருவரும் துல்யமான ஈச்வரர்களே'' என்னும் ஐந்தாவது பக்ஷம் தேசிகனால் ஆதரிக்கப்படவில்லையென்று விளங்குகிறது.

47. ''ஸ்ரீரித்யேவ ச நாமதே'' [ஸ்ரீ: என்பதே உன் திரு நாமமாகிறது] என்னுமிடத்திற்கு வியாக்யானம் செய்யும் போது தேசிகன், 'எம்பெருமானை ஆச்ரயித்திருக்கிறாள்' முதலான நிருக்திகளைக் காட்டி ''நிஸ்ஸங்கல்பா நிராச்ரயேதி நாமது—''ச்ரயதே ச பரம் பத₃ம்'' இத்யாத்₃யவிரோதே₄ந நேயம்—அகலங்காऽப்ருதாத₄ாரா இதி பூர்வோகதாநுஸாராச்ச| அப்ருதோ ஹி பரமாத்மா, தத₃ாத₄ாரா ச இயம்| அத ஏவஹி ஸோऽபி ஸ்ரீநிவாஸ: ச்ரீத₄ர: இதி ச ஸமாக்₂யாயதே| உக்தம் ச ஸ்ரீஸாத்வதே யதோऽஹமாச்ரயச்சாஸ்யா மூாத்திர்மம ததா₃த்மிகா இதி|'' ['நிஸ்ஸங்கல்பா நிராமரயா' (ஸங்கல்பமில்லாதவள், தனக்கோர் ஆச்ரயமில்லாதவள்) என்று லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமத்தில் உள்ள ஆச்ரயமில்லாதவள் என்னும் நாமத்திற்கு 'அவள் பரமாத்மாவை ஆச்ரயித்திருக்கிறாள்' என்னும் நிருக்திக்கு முரணில்லாதபடி 'பரமாத்மாவைத் தவிர வேறு ஆச்ரயமில்லாதவள்' என்று பொருள் கொள்ளவேண்டும். அந்த நாமங்களிலேயே 'அகலங்கா அப்ருதாத₄ாரா' என்று இதற்குமுன் படிக்கப்பட்ட நாமங்களோடு அப்போதுதான்

பொருத்தமாயிருக்கும். 'அம்ருத:' (மரணமில்லாதவன்) என்று சொல்லப்படுபவன் பரமாத்மா; அவனை ஆதாரமாகக் கொண்டவள் இவள் என்பது 'அம்ருதாதாரா' என்னும் நாமத்திற்குப் பொருள்; இப்படி இவளுக்கே ஆதாரமாக அவன் இருக்கையாலே தான் அவன் 'ஸ்ரீநிவாஸன்' என்றும் 'ஸ்ரீதரன்' என்றும விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் படிக்கப்படுகிறான் ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதையிலும், "நான் அப்பிராட்டிக்கு ஆஶ்ரயமாயிருக்கையால் என் ஸ்வரூப ரூபங்கள் அவளை தரித்து நிற்கின்றன" என்று எம்பெருமானுடைய வார்த்தையாகச் சொல்லப்பட்டது] என்று "பிராட்டிக்கு எம்பெருமான் ஆதாரமாக இருக்கிறான்" என்று தெளிவாகக் காட்டியிருக்கையால், "பெருமாளும் பிராட்டியும் ஒருவர்க்கொருவர் ஆதாரமல்லர்; இருவரும் ஸமமானவர்களே" என்னும் பஞ்சமபக்ஷத்தை தேசிகன் மனத்தாலும் நினைத்தவரல்லர் என்று விளங்குகிறது.

48. 'ப்ரும: கதம் த்வாம் வயம்' என்னுமிடத்துக்கு வியாக்யானம் செய்கையில் தேசிகன் 'ததிதரஸர்வஶேஷித்வேந ப்ரஸித்தாம்' [எம்பெருமானைத்தவிர மற்ற அனைவருக்கும் ஶேஷியாக ப்ரஸித்தி பெற்றபிராட்டியாகிற உன்னை] என்று அருளிச்செய்கையாலே பிராட்டிக்கு ஏகோந ஶேஷித்வத்தை இசையும் நாலாவது பக்ஷத்தையே தேசிகன் ஏற்றுக்கொண்டுள்ளார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்குகிறது. இதை இசையாத ஐந்தாவது பக்ஷம் தேசிகனால் வெகுதூரம் தள்ளப்பட்டது என்று புலனாகிறது.

49. முதல் ஶ்லோக வ்யாக்யானத்தில் தேசிகன் பிராட்டியைப்பற்றிய புறமதத்தவர்களின் பல கருத்துக்களைக் கண்டிக்கிறார். 'பிராட்டியை எம்பெருமானுடைய ஸத்தை, அஹந்தை என்றெல்லாம் பாஞ்சராத்ரம் கூறுகையாலே இவள் தனியான சேதனையல்லள்' என்பதைக் கண்டிக்கும் போது "ஸத்தாதி ஶப்தாஸ்த்வஸ்யாம் புகூவ

த₃ந்தரங்க₃ விஶேஷணத்வாபி₄ப்ராயா:" [இவள் விஷயமாக ஸத்தை அஹந்தை முதலான சப்தங்களை வழங்கியிருப்பது எம்பெருமானுக்கு இவள் அந்தரங்க விஶேஷணமாயிருப்பவள் என்னும் கருத்துடையது] என்று தேசிகன் பிராட்டியை எம்பெருமானுக்கு விஶேஷணமாக அருளிச்செய்கையாலே இருவரும் ஸமமானவர்கள் என்னும் ஐந்தாவது பக்ஷம் அவரால் தள்ளப்பட்டது.

50. அந்த ப்ரகரணத்திலேயே "ஒரு பாதி நாராயணனாகவும், ஒரு பாதி லக்ஷ்மியாகவும் உள்ள திருமேனியை எம்பெருமான் ஏற்றுக்கொண்டிருப்பதிலிருந்து பெருமாளுக்கும் பிராட்டிக்கும் விக்ரஹ ஐக்யமும் ஸ்வரூப ஐக்யமும் பே₄தா₃பே₄த₃மும் உணர்த்தப்படுகிறது" என்னும் புறமதத்தவர்களின் ஒரு கருத்தை எடுத்து, அதற்கு ப்ரமாணமாக

'த்வம் யாத்₃ருஶோஸி கமலாமபி தாத்₃ருஶீம் தே
 தா₃ராந் வத₃ந்தி யுவயோ: நது பே₄த₃க₃ந்த₄: ।
மாயாவிபு₄க்த யுவதீதநும் ஏகமேவ
 த்வாம் மாதரம் ச பிதரம் ச யுவாநமாஹு: ॥'

[விஷ்ணுவைப₄வாதி₄காரம்]

[எம்பெருமானே! நீ எத்தகையவனோ அத்தகையவளாகவேயிருக்கும் லக்ஷ்மீ தேவியை உனக்கு மனைவியாகக் கூறுகிறார்கள். உங்கள் இருவருக்கிடையே வேறுபாட்டின் வாஸனையும் கிடையாது. மாயையினால் வேறாயிருக்கும் யுவதி உடலைக்கொண்ட உன்னைத் தாயாகவும், யுவாவின் உடலைக் கொண்ட உன்னைத் தந்தையாகவும் கூறுகிறார்கள்.]

என்னும் ஶ்லோகத்தைக் காட்டி அக்கருத்தைக் கண்டிக்கும்போது "பெருமாளும் பிராட்டியுமாகிற இருவரும் தாமே விரும்பி அத்தகையதொரு திருமேனியை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்றே இதற்குப் பொருள் கொள்ளவேண்டும். இந்த விக்₃ரஹ ஐக்யத்தைக் கொண்டு ஶ்ருதி முதலானவற்றோடு முரண்பட்ட ஸ்வரூப ஐக்யத்தைப் பொருளாகக்

கொள்ளலாகாது'' என்று அருளிச்செய்திருக்கிறார் தேசிகன். இந்த ஶ்லோகம் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் எந்த வேறுபாடும் இல்லை என்னும் ஐந்தாவது பக்ஷத்தையும் ஆதரிப்பது போல் அமைந்திருக்கிறது. தேசிகன் உண்மையில் அப்பக்ஷத்தை ஆதரித்திருந்தால் இந்த ஶ்லோகத்தைக் கொண்டு அவர் அதை ஸாதித்திருக்கலாமே. அப்படி ஸாதிக்காததிலிருந்து அப்பக்ஷத்தை ஆதரிக்க அவர் கனவிலும்கருதவில்லை என்று தெரிகிறது.

51 இரண்டாவது ஶ்லோகத்தில் 'லோகைகேஶ்வரி' என்னும் பதத்திற்கு வ்யாக்யானம் செய்கையில் ''லோகைகேஶ்வர:-ப்ரமாண ஸித்₃தா₄நாம் ஸர்வேஷாம் அத்₃விதீய ஈஶ்வர:|'' [ப்ரமாணங்களால் அறியப்படும்எல்லாப் பொருள்களுக்கும் ஒப்பற்ற ஈஶ்வரன் லோகைகேஶ்வரன் ஆகிறான்.] என்று லோகைகேஶ்வர ஶப்₃த₃த்தாலே எம்பெருமானைக் கூறுவதாகச் சொல்லி, அதற்கு ஶ்ருதி கீ₃தை முதலான ப்ரமாணங்களைக் காட்டி ''ஏத₃ருஶ - ஈஶ்வர பத்நீத்வாதி₃ஹ லோகைகேஶ்வரி இத்யுக்தம்'' [இப்படிப்பட்ட ஈஶ்வரனுடைய பத்னியாகையாலே இங்கு இவளை லோகைகேஶ்வரி என்று அழைத்தார்] என்று பா₄ஷ்யமிட்டார் தேசிகன். ஸர்வபூ₄தேஶ்வரத்வ வசநஸாம்ய யத்தாலே இருவரும் முக்₂யேஶ்வரர்கள் என்னும் ஐந்தாவது பக்ஷத்தை தேசிகன் தழுவியிருந்தால் ''இருவரையும் ஸர்வபூ₄தேஶ்வரர்களாக ஶ்ருதி சொல்லுகையாலே இவளும் முக்₂யேஶ்வரியே'' என்றல்லவோ இங்கு வ்யாக்யானம் இட்டிருக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் ''உலகிற்கு ஒப்பற்ற ஈஶ்வரன்'' என்று எம்பெருமானைச் சொல்லி 'அவனுடைய பத்நியாகையாலே இவள் லோகைகேஶ்வரியாகிறாள்'' என்றவ்யாக்₂யானமிட்டிருப்பதிலிருந்து தேசிகன் நாலாவது பக்ஷத்தையே தழுவியவர் என்பதும், ஐந்தாவது பக்ஷத்தைக் கனவிலும் எண்ணாதவர் என்றும் தேறுகிறது.

52. "ஆநீத₃வாதம் ஸ்வத₄யா தேதே₃கம்" [எல்லாப் பொருள்களும் இல்லாமலிருந்த ப்ரளயகாலத்தில் ஸ்வதை₄யோடு கூடிய ஒன்றான பரப்பொருளே இருந்தது] என்னும் வேத₃வாக்யத்தைக் கொண்டு 'ஸ்வத₄ா' ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் பிராட்டிக்கும் முக்₂ய ஜக₃த்காரணத்வம் உண்டு என்று சிலர் வாதம் செய்கிறார்கள். இந்த வாதத்தை தேசிகன் இரண்டாவது ஶ்லோக பா₄ஷ்யத்தில் பல காரணங்களைக் காட்டி மறுத்திருக்கிறார். அவற்றில் முதலாவது காரணம் "ஸ்வாதீ₄ந ஸர்வஸத்தாகஸ்ய தஸ்ய அந்யாதீ₄ந ப்ராணநத்வ அஸம்ப₄வாத்" [தனக்கு அதீ₄னமான (வசப்பட்ட) எல்லாப் பொருள்களின் ஸத்தையையும் உடைய ப்₃ரஹ்மத்திற்கு, பிராட்டியுள்ளிட்ட மற்றொருவருக்கு வசப்பட்ட வாழ்ச்சியுடையதாயிருக்கை பொருந்தாதாகையால்] என்பது இவ்வாக்யம் 'பிராட்டியின் ஸத்தை எம்பெருமானுக்கு அதீ₄நம். அவனுடைய ஸத்தை பிராட்டிக்கு அதீ₄நமல்ல" என்னும் நாலாவது பக்ஷத்தையே தழுவியிருப்பதால் ஐந்தாவதுபக்ஷத்தை வெகுதூரம் தள்ளுகிறது. இரண்டாவது காரணம் "ஸ்வத₄ா" ஶப்₃த₃த்தைப் புராண ப்ரயோக₃த்தை மட்டும் கொண்டு லக்ஷ்மீ விஷயமாகக் கொள்ளுவதைக்காட்டிலும், "ஸ்வஸ்மிந் தீ₄யதே" என்னும் வ்யுத்பத்தியாலே "ஸ்வத₄ா" ஶப்₃த₃ம் ப்₃ரஹ்மத்தின் ஸத்தையையே குறிப்பதாகவோ, அல்லது ப்₃ரஹ்மத்தின் விஶ்வத₄ாரண (அனைத்தையும் த₄ரிக்கும்) ஸாமர்த்₂யத்தையே குறிப்பதாகவோகொள்ளுவதே பொருந்தும் என்பது. இதற்கு ஆத₄ாரமாக ஸ்ரீபா₄ஷ்யகாரர் ப்₃ரஹ்மஸூத்ரம் 2-4-7ல் 'ஆநீத₃வாதம் என்று தொடங்கும் வேதவாக்யத்தாலே பரப்₃ரஹ்மம் ஒன்றே பிரளய காலத்தில் இருந்தது என்று சொல்லப்படுகிறது" என்று அருளிச் செய்ததை மேற்கோளாகக்காட்டுகிறார் தேசிகன். இதிலிருந்து ஸ்ரீராமாநுஜரும் ஸ்ரீதேசிகனும் ஐந்தாவது பக்ஷத்தை அணுவளவும் ஆதரித்தவர்களல்லர் என்று விளங்

ருகிறது., இதற்குமேல், 'ஸ்வதா' ஶப்₃த₃த்திற்கு லக்ஷ்மியையே பொருளாகக் கொண்டாலும் 'அவள் ப்₃ரஹ்மத்தோடு கூட இருந்தாள்' என்றே ஸித்திக்கும் என்னும் மூன்றாவது காரணத்தையும், " 'பிராட்டியால் ப்₃ரஹ்மம் உயிர் வாழ்கிறது' என்று பொருள் கொண்டாலும் இதற்கு எம்பெருமானுடைய ப்ரேமபாரதந்த்ரியத்திலேயே தாத்பர்யமாகும்" என்னும் நாலாவது காரணத்தையும் காட்டுகிறார். இவற்றிலிருந்து தேசிகன் ஐந்தாவது பக்ஷத்தை வெகுதூரத்தில் விலக்கிவிட்டார் என்பது தெளிவாகத் தேறுகிறது. [ஸ்ரீ 93, 94].

53. 'ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வ மஶ்நுதே" [ஶ்ரத்₃தா₄ ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் பிராட்டியாலே தே₃வனான எம்பெருமான் தே₃வத்தன்மையை அடைகிறான்] என்னும் வேத₃வாக்யத்தைக் கொண்டு ஐந்தாவது பக்ஷத்தைச் சிலர் சாதிக்க எண்ணுகிறார்கள், இவ்வாதத்தை இரண்டாவது சுலோக பா₄ஷ்யத்திலேயே மறுத்திருக்கிறார் தேசிகன்; 'இயற்கையிலேயே பெருமைபெற்ற ஸூர்யனுக்கு தன் ஒளியாலே பெருமை மேலும் கூடுகிறது என்பது போலே, எம்பெருமானுக்குத் தன் பத்னியால் ஒருபெருமை உண்டாகிறது என்றே பொருள் கொள்ளவேண்டும்' என்று நிர்ணயித்திருக்கிறார் தேசிகன். இதுவும் நாலாவது பக்ஷத்தையே அவர் தழுவியவர் என்பதையும் ஐந்தாவது பக்ஷத்தை அறவே ஒதுக்கியவர் என்பதையும் கல்வெட்டாகக் காட்டுகிறது.

54. ப்₃ராஹ்மபுராணத்தில் லக்ஷ்மீஸஹஸ்ரநாமத்தில் "அனைவரிலும் மேம்பட்டவள், அனைவரிலும் உயர்ந்தவள், அனைவருமாய் இருப்பவள், 'உபமானமற்றவள்' என்னும் நாமங்கள் படிக்கப்படுகின்றன "பரமாத்மாவுக்கு ஸமமானதோ அல்லது மேம்பட்டதோ ஒன்றுமில்லை" "எவனைக் காட்டிலும் மேலானது எதுவும் இல்லையோ" "ஈஶ்வரர்க்கெல்லாம் மேலான மஹேஶ்வரனாய் இருக்கும் அவனை" "அசேதநப் பொருள்களையும் ஜீவர்களையும் நியமிக்கும்

தேவன் ஒருவனே'' ''இவ்வுலகிற்கு ஒருவனே அரசன்'' ''அசைவனவும் அசையாதனவுமான எல்லாப் பொருள்களையும் நியமிப்பவன் ஒருவனே'' 'ஒருவனே நியமிப்பவன், நியமிக்கும் இரண்டாவது பொருள் கிடையாது'' ''அனைத்தையும் நியமிப்பவன் விஷ்ணுவே'' முதலான ஶ்ருதிஸ்ம்ருதி வாக்கியங்களை யொட்டி எம்பெருமானைத் தவிர்ந்த மற்றவர்களைக் காட்டிலும் பிராட்டிக்குப் பரத்வத்தையே அந்தநாமங்கள் கூறுவனஎன்றே கொள்ளவேண்டும் என்று ஸ்ரீதேசிகன் இரண்டாவது ஶ்லோகபாஷ்யத்தில் அருளியுள்ளார். இதிலிருந்து அவர் நாலாவது பக்ஷத்தில் நிலைநின்றவர் என்றும், ஐந்தாவது பக்ஷத்தைக் கண்டனம் செய்பவர் என்றும், அவர் ஐந்தாவது பக்ஷத்தைத் தம் பக்ஷமாகக் கொண்டவர் என்று வாதிடுவது அவருக்குச் செய்யும் ஆசார்யத்ரோஹமேயாகும் என்றும் விளங்குகிறது [விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷணம் பக்கம் 1, 2, ௨ ஸ்ரீ 88 89]

55. சது:ச்லோகீ இரண்டாவது ஶ்லோகத்தின் பாஷ்யத்தில். பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் பிராட்டிக்கு எம்பெருமானோடு அத்யந்த ஸாம்யம் சொல்லுமிடங்களை எப்படி நிர்வஹிக்க வேண்டும் என்று விளக்கும்போது, ஸ்ரீ தேசிகன் 'அத்யந்தஸாம்யமப்யஸ்யாம் த்ருஷ்டாந்த ஸ்வரஸாகூதம் | ஸ்தாப்யம் நியத நிர்பாத பத்நீத்வாத்ய விரோதத: ||'' [பிராட்டிக்குஎம்பெருமானைத்ருஷ்டாந்தமாகக் காட்டி அத்யந்த ஸாம்யம் வெளிப்படையாகச் சொல்லப்படும் இடங்களெல்லாம், எல்லாவிடங்களிலும் இவளுக்குச் சொல்லப்படும் தடையற்ற பத்நீத்வம் முதலானவற்றோடு முரண்படாமல் நிர்வஹிக்கப்படவேண்டும்] என்று மிகத் தெளிவாகப் பிராட்டிக்கு எம்பெருமானோடு அத்யந்த ஸாம்யம் இல்லைஎன்றுகாட்டியிருக்கிறார். இதிலிருந்து நாலாவது பக்ஷத்தை ஆதரிக்கும் தேசிகன் ஐந்தாவது பக்ஷத்தை வெகுதூரத்தில் துரத்தியவர் என்று விளங்குகிறது. [ஸ்ரீ 96]

56. இரண்டாவது ஶ்லோகவ்யாக்யானத்தில் "முக்த னுக்குப் பரம புருஷனோடு மேலான ஒற்றுமை "பரமம் ஸாம்யம் உபைதி" என்னும் வேதவாக்கியத்திலும், 'மம ஸாதர்ம்யமாகதா:' என்னும்கீதாஶ்லோகத்திலும் ஏற்பட்டிருந்தபோதிலும், "ஜகத்வ்யாபாரவர்ஜம்" என்று ப்ரஹ்ம ஸூத்ரத்தில் சொல்லியபடியே பரப்ரஹ்ம லக்ஷணமான ஜகத்காரணத்வம் முதலான ஆகாரங்களால் வேறுபாடு நிலை நிறுத்தப்படுவது போலவே, இங்கும் (இப்பிராட்டி விஷயத்திலும்) ஆகவேண்டும்" என்று ஶ்ரீதேசிகன் ஸாதித்துள்ளார். இதிலிருந்து அவர் நாலாவது பக்ஷத்தைக் கைக்கொண்டவரேயொழிய, பிராட்டிக்கு முக்ய ஜகத் காரணத்வம் கூறும் ஐந்தாவது பக்ஷத்தை ஆதரிப்பவரல்லர் என்பது நன்கு புரியும். [ஶ்ரீ 4, 85]

57. தேசிகன் மூன்றாவது ஶ்லோக பாஷ்யத்தின் இறுதியில் பிராட்டியின் மோக்ஷோபாயத்வவிஷயத்தில் நாயனாராச்சான் பிள்ளையோடு கருத்து வேற்றுமையைத் தெரிவிக்கும்போது "மோக்ஷ ப்ரதே பகவதி முமுக்ஷுணாம் கடகதயைஷா திஷ்டதீதி ச ஸர்வஸம்மதம்| பரிபூர்ணானுபவ ப்ரதாந ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வேதி யதாப்ரமாணம் பவது|" [மோக்ஷத்தை அளிக்கும் பகவானிடத்தில் முமுக்ஷுக்களுக்கு இவள் கடகையாக (அவர்களைச் சேர்ப்பிக்கும் புருஷகார பூதையாக) இருக்கிறாள் என்பது எல்லா ஆசார்யர்களும் இசைந்தது. பரிபூர்ண அநுபவமாகிற மோக்ஷத்தை அளிக்கும் ஸங்கல்பத்தை பகவான் தானே செய்கிறானா அல்லது பத்நியோடு கூடியிருந்து செய்கிறானா என்பது ப்ரமாணங்கள் சொல்லுகிறபடி ஆகட்டும்.] என்று அருளிச் செய்வதன் மூலம் மோக்ஷப்ரதாந ஸங்கல்பத்தை பகவானே செய்கிறான் என்பது நாயனாருடைய பக்ஷம் என்றும், பத்நியோடு கூடியிருந்து செய்கிறான் என்பது தம்முடைய

பக்ஷம் என்றும் தெளிவாகக் காட்டுகிறார். தம்முடைய பக்ஷத்தைச் சொல்லும்போது 'ஸ்ரீ ஸ்ரீய யோர்வா' ['மோக்ஷப்ரதா₃ந ஸங்கல்பம்' பெருமானுக்கும் பிராட்டிக்கும் சேர்ந்தா] என்று சொல்லாமல் 'ஸபத்நீகஸ்யவா' [பத்தினியோடு கூடிய எம்பெருமானுக்கா] என்று அருளிச்செய்கையால், உபாயத்வத்திலும் பிராட்டிக்குஅப்ராதா₄ன்யத்தையே தாம் திருவுள்ளம் பற்றியமையைக் காட்டுகிறார். இதனாலும் தேசிகன் நாலாவது பக்ஷத்தையே தழுவியவர் என்றும், ஐந்தாவது பக்ஷத்தை விலக்கியவர் என்றும் தெளிவாகிறது.

58. ஸ்ரீபா₄ஷ்யத்திற்கு வ்யாக்₂யானமாக தேசிகன் ஸாதித்த தத்வடீகையில், ஸ்ரீபா₄ஷ்ய மங்கள ச்லோகத்திலுள்ள "ப்₃ரஹ்மணி ஸ்ரீநிவாஸே" என்னும்பகுதிக்கு வ்யாக்₂யானம் செய்கையில் "ப்₃ரஹ்மஶப்₃த₃ஸ்ய ஏகரூடி₄ம அநுருத₄யைவ தேத₃வ ஸ்ரீநிவாஸ ஶப்₃தே₃ந விஶேஷ்யதே. யா ஸர்வேஶ்வராஶ்ரீயதே ஸா ச ததா₃ஶ்ரயேதி/" [ப்ரஹ்ம ஶப்₃த₃ம் ஒரே பரம் பொருள் விஷயத்தில் ரூடி₄யை உடையதாகையாலே, அந்த ஶப்₃த₃மே ஸ்ரீநிவாஸ ஶப்₃த₃த்தால் விசேஷிக்கப் படுகிறது; எந்தப் பிராட்டி அனைவராலும் ஆஶ்ரயிக்கப் படுகிறாளோ, அவளும் எம்பெருமானையே ஆஶ்ரயித்திருக்கிறாள் என்பது இதற்குப் பொருள்] என்று பிராட்டியும் எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கிறாள் என்றும், அவளால் ஆஶ்ரயிக்கப்பட்ட எம்பெருமான் ஒருவனே பிரம்மம் என்றும் அருளிச்செய்கையால் இருவர் ப்₃ரஹ்மம் என்று கூறும் பஞ்சம பக்ஷத்தை தேசிகன் ஒதுக்கியிருக்கிறார் என்று விளங்குகிறது.

59. ஸ்ரீபா₄ஷ்யத்தில் ப்₃ரஹ்மஶப்₃த₃த்தை விவரிக்கும் போது, "ஸர்வத்ர ப்₃ருஹத்த்வகு₃ணயோகே₃ந ஹி ப்₃ரஹ்மஶப்₃த₃: | ப்₃ருஹத்த்வம் ச ஸ்வரூபேண கு₃ணைஶ்ச யத்ர அநவதி₄காதிஶயம் ஸோऽஸ்ய முக்₂யோऽர்த்த₂: | ஸ ச ஸர்வேஶ்வர ஏவ; அதோ ப்₃ரஹ்ம ஶப்₃த₃: தத்ரைவ முக்₂ய

வ்ருத்த: |'' [எல்லா இடத்திலும் பெரியதாயிருக்கையாகிற குணம் இருக்கையாலேயே ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் வழங்கப்படுகிறது. அந்தப் பெரிதாயிருக்கையானது ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் எங்கு எல்லையற்ற மேன்மையை உடையதாயிருக்கிறதோ, அவ்விடமே ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்திற்கு முக்₂யார்த்த₂மாகும். அவ்விடம் ஸர்வேஶ்வரன் ஒருவனே; ஆகையால் ப்₃ரஹ்ம ஶப்₃த₃ம் அவனிடத்திலேயே மு₂க்₂யமானதாக ஆகும்] என்றவிடத்தில் ''ஸர்வேஶ்வர ஏவ'' என்று ஏகாரமிட்டுச் சொல்லியிருப்பதற்கு வ்யாக்₂யானம் செய்யும்போது, ''ஏகஸ்யைவ ஸர்வநியமநாதி₃ரூபம் நிரதிஶய ப்₃ருஹத்த்வம் ஶாஸ்த்ரோக்தம்; தத₃ந்யேஷாந்து தாத₃தீ₄ந்யாத் தத்த்வம் தாத்₃ருக்த்வம் அபி நாஸ்தி இதி அவதா₄ரண-அபி₄ப்ராய:'' [ஒருவனுக்கே அனைவரையும் நியமிக்கை முதலான எல்லையற்ற மேன்மை ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ளது. அந்தப் பரம புருஷனைத் தவிர மற்றவர்கள் அவனுக்கு அதீ₄நமாகவிருக்கையாலே அவனைப்போல் ப்₃ரஹ்மமோ அவனைப் போன்றவரோ அல்லர் என்பது ஏவகாரத்தின் பொருள்] என்று ஸ்ரீ தேசிகன் தத்த்வடீகையில் அருளியிருக்கிறார். இதிலிருந்து பிராட்டியும் எம்பெருமானுக்கு அதீ₄நமானவள் என்றும், அவனைப்போன்று ப்₃ரஹ்மமானவளோ அல்லது அவனுக்குத் துல்யமானவளோ அல்லள் என்றும் கூறும் நாலாவது பக்ஷத்தையே தழுவியவர் தேசிகன் என்றும், ஐந்தாவது பக்ஷத்தைத் தள்ளியவர் என்றும் வயிரவுருக்காகிறது. [ஸ்ரீ 64]

60. தேசிகன் தம்முடைய ஸ்ரீஸ்துதியில் ''யத்ஸங்கல்பாத்'' என்று தொடங்கும் நாலாவது ஶ்லோகத்தில் எம்பெருமானே உலகனைத்தையும் சரீரமாகக் கொண்டவன் என்றும், அவனுடைய ஸங்கல்பத்தாலேயே ஜக₃த் ஸ்ருஷ்டி முதலானவை உண்டாகிறது என்றும் கூறுவதன் மூலம் உலகிற்கு நிமித்த உபாதா₃ந காரணமானவன்

எம்பெருமானே என்றும், அவனை அடையாளம் காட்டுபவளாகவே பிராட்டி இருக்கிருள் என்றும் மிகத்தெளிவாக அருளிச்செய்துள்ளார். ஆகையால் பிராட்டியும் ஸகல ஜகத்துக்கும் முக்ஞ்ய ஜகத்காரணமாயிருப்பவள் என்று கூறும் ஐந்தாவது பக்ஷத்தை அவர் ஒதுக்கியவர் என்று விளங்குகிறது இவரே 'த்வாமேவாஹு:' என்று தொடங்கும் ஒன்பதாவது ஶ்லோகத்தில் 'எங்களுக்குப் பெருமாளும் பிராட்டியுமாகிற இருவரும் தெய்வமாகிருர்கள்' என்று சொல்லியிருக்கிருரே? எனில்: நாலாவது ஶ்லோகத்தை ஒட்டிப்பார்க்கும்போது, இந்த ச்லோகத்தில்-பிராட்டியையே பரமாத்மாவாகக்கூறும் சில சாக்தர்களுக்கும் உலகை ஒரு மிதுந சேஷமாக ஒப்புக்கொள்ளாமல் எம்பெருமான் ஒருவனுக்கே ஶேஷமாகக் கொள்ளும் ஏகாயநர்களுக்கும் உள்ள சண்டையைக் குறிப்பிட்டு, "நீங்கள் இருவருமே எங்களுக்கு ஶேஷிகளாகையாலே நாங்கள் மிதுநாயநர்களே" என்று கூறியதேயாகும். ஆகையால் எம்பெருமான் ஒருவனே ப்ரதாநமான ஜகத்காரணன் என்று முன் ச்லோகத்தில் சொன்னதோடு முரண்படாது, இந்த ச்லோகத்திலும் "த்வத்ஸம்ப்ரீத்யை விஹரதி ஹரௌ" என்று உலகைப் படைப்பது முதலான லீலைகளை எம்பெருமானே செய்கிருன் என்றும், அதில் பிராட்டிக்கு அந்வயம் ஆனந்தம் அடைவதன் மூலமே என்றும் குறித்திருக்கையால் இந்த ச்லோகத்தாலும் உலகிற்கு உபாதாநநிமித்தங்களாயிருக்கை எம்பெருமானுக்கே என்றும், கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்ளுகை அல்லது உலகை உடையவர்களாயிருக்கையாகிற ஶேஷித்வத்திலேயே இருவரும் சேர்ந்து அந்வயிக்கிருர்கள் என்றும் தெளிவாகக் காட்டினர் தேசிகர். ஆகையால் முந்தின ச்லோகத்தில் கூறியதை இது வலியுறுத்துவதேயாகும்.

61, தேசிகன் தமது அச்யுத ஶதகம் 14 வது ச்லோகத்தில்—

**புருஷாஸ் தவ விபூ₄தி:**
**அச்யுத லக்ஷ்ம்யா: ஸ்த்ரீ ஸம்ஜ்ஞா: |**
**நாஸ்தி பரம் யுவயோ:**
**ஸாऽபி ஸ்ரீர்ப₄வதி தவகிம் புநரிதரத் ||**

[அடியவர்க்கு மெய்யனே! ஆண்கள் உனக்கும், பெண்பாலர் பெரியபிராட்டிக்கும் உடைமையாகின்றனர். இருவரிலும் மேலானதொரு வஸ்து இல்லை; அத்தகைய பெரிய பிராட்டியாரும் உன் உடைமையாகவே இருக்கின்றாள். மற்றவற்றைப்பற்றிச் சொல்லவேண்டுமா?] என்று 'பிராட்டி ப₄க₃வானுக்கு உடைமையாயிருப்பவளே' என்று அருளியிருக்கையால், பிராட்டி ஸ்வதந்த்ரமான ஈஶ்வரி என்கிற ஐந்தாவது பக்ஷத்தை தேசிகன் கனவிலும் ஆதரிக்கவில்லையென்று புலனாகிறது. [ஸ்ரீ 81, 82]

62. தேசிகன் ப₄க₃வத்₃த்₄யான ஸோபாநம் 2 வது ஶ்லோகத்தில்—

**லக்ஷ்மீ பூ₄ம்யோ: கரஸரஸிஜைர்லாலிதம்**
**ரங்க₃ப₄ர்த்து: |**
**பாத₃ாம் போ₄ஜம் ப்ரதிப₂லதி மே பா₄வநா**
**தீ₃ர்க்கி₄காயாம் ||**

[பெரியபிராட்டி, பூமிப்பிராட்டி ஆகிய இவர்களின் திருக்கைத்தாமரைகளால் வருடப்பெற்றதாய் உள்ள திருவரங்கப் பெருமானுடைய திருவடித்தாமரை அடியேனுடைய நினைவென்னும் பொய்கையில் உருக்காட்டுகின்றது] என்று அருளியிருக்கையால் இயல்வானதான பிராட்டியின் ஶேஷத்வத்தைச் செயற்கையானது என்று கூறும் ஐந்தாவது பக்ஷத்தை தேசிகன் ஆதரிக்கவில்லை யென்று தெளிவாகிறது. [ஸ்ரீ 74]

63. தயா சதகம் 36-வது ஶ்லோகத்தில் "பரஹிதமநுகல்பே பு₄ாவயந்த்யாம் பு₄வத்யாம ஸ்தி₂ர மநுபதி₄ ஹார்த₃ம் ஶ்ரீநிவாஸோ த₃த₄ந: । லலிதருசிஷு லக்ஷ்மீ பூ₄மீ நீளாஸு நூநம் ப்ரத₂யதி ப₃ஹுமாநம் த்வத்ப்ரதிச்ச₂ந்த₃ பு₃த்₃த்₄யா ॥" [தயாதேவியே! பிறருக்கு நன்மைபுரிவதையே சிந்தித்துக் கொண்டிருக்கும் உன்னிடத்தில் எக்காரணத்தையும் முன்னிடாத நிலையான அன்பைக் கொண்டுள்ள ஶ்ரீநிவாஸன் அழகிய ஒளியுடையவரான பெரியபிராட்டியார், பூமிதேவி, நீளாதேவி ஆகியவர்களிடம் உன் பிரதிபிம்பங்கள் (நிழல்கள்) என்ற பெருமதிப்பைக்காட்டுகிறான்] என்று பிராட்டிமார் மூவரையும் தயையின் நிழல்களாக வர்ணித்தார் தேசிகன். இது "குழற்கோவலர்மடப்பாவையும மண்மகளும் திருவும், நிழல்போல்வனர் கண்டு நிற்குங்கொல்" என்னும் திருவிருத்தம் இரண்டாவது பாசுரத்தை அடியொற்றியுள்ளது இதிலிருந்துபிராட்டிமார் மூவரும நிழல் போலே தம்முடைய ஸத்தாஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளைப் பெருமானிடமிருந்தே பெறுகின்றனர் என்று காட்டுகிறார் தேசிகன். ஆகையால் பிராட்டி ஸ்வதந்த்ரேஶ்வரி என்னும் பஞ்சமபக்ஷம் அவரால் நிரஸிக்கப்பட்டதாயிற்று. [ஶ்ரீ 9]

64 ஜயத்யாஶ்ரிதஸந்த்ராஸத்₄வாந்த வித்₄வம்ஸநோத₃ய: ।
ப்ரபு₄ாவாந் ஸீதயா தே₃வ்யா பரம வ்யோமபு₄ாஸ்கர: ॥

[அடியார்களுடைய ப₄யமாகிற இருளைப்போக்கிக்கொண்டே உதிப்பவனாய், ஸீதாதேவியாகிற ஒளியையுடையவனாய் பரமாகாசத்தில் விளங்கும் ஸூர்யனை எம்பெருமான் வெற்றி பெற்று விளங்குகிறான்] என்னும் அப₄யப்ரதா₃நஸாரஶ்லோகத்தில் எம்பெருமானை ஸூர்யனாகவும் பிராட்டியை அவனுடைய ஒளியாகவும் அனுஸந்திக்கையாலே

பிராட்டி எம்பெருமானாலேயே ஸத்தை பெற்றவள் என்று காட்டுகிறார் தேசிகன். அவளை ஸ்வதந்த்ரையாகக் காட்டும் பஞ்சம பக்ஷத்தை இதன் மூலம் நிரஸிக்கிறார்.

65. ஶரணாகதி கத்யத்தில் பிராட்டியைப் பற்றிய முதல் சூர்ணையில் "அநவதிகாதிஶய" என்னும் பதத்தை விவரிக்கும்போது பிராட்டிக்கு எம்பெருமானோடுள்ள பலவகை ஸாம்யங்களை விவரித்துவிட்டு, "எம்பெருமானோடு பலவகையில் ஸாம்யம் கூறுவது, 'எம்பெருமான் ஒத்தார் மிக்காரையில்லாதவன் என்பதோடு முரண்படாது. நேர்மாறாக அவன் ஒத்தார் மிக்காரையில்லாதவன் என்பதையே உறுதிப்படுத்தும்; எப்படியெனில்: இவ்வண்ணமாகப் பல பெருமைகளில் தன்னோடு ஒத்த பத்னியோடு கூடியிருக்கை பிராட்டியை உள்ளிட்ட வேறு எவர்க்கும் இல்லையே; அப்படியிருந்தால் தானே 'இவனுக்கு ஒத்தாரோ மிக்காரோ உண்டோ' என்று ஐயமுறமுடியும். ஸ்ரீராமாயணத்திலும் 'ஜனகராஜன் திருமகளைத் தனக்கென்று இட்டுப் பிறந்த (ஸ்ரீராமபிரானுகிற) தத்துவத்தின் பெருமை அளவிடவொண்ணாததன்றோ' என்று இவ்விஷயம் விளக்கப்பட்டதன்றோ; இவ்வண்ணமாகப் பிராட்டியின் ஶீலாதி குணங்கள் எல்லையற்ற மேன்மையை உடையவையானாலும் 'ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன் எம்பெருமான்' என்று முழங்கும் ஶ்ருதி விரோதம் வராது" என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை ஸாதித்திருக்கிறார் ஸ்ரீதேசிகன். இதிலிருந்து பிராட்டியை எம்பெருமானோடு ஒத்த ப்ரஹ்மமாகவோ, ஒத்த ஈஶ்வரியாகவோ கூறும் பஞ்சமபக்ஷம் அவரால் புறக்கணிக்கப்பட்டது என்று விளங்குகிறது.

[விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷணம் 7]

66. எம்பெருமானார் ஸ்ரீரங்ககத்யத்தின் தொடக்கத்தில் "ஸ்வாதீநத்ரிவிதசேதநாசேதந ஸ்வரூபஸ்திதி ப்ர

வ்ருத்தி பே₄த₃ம் ......... பரப்₃ரஹ்மபூ₄தம் புருஷோத்தமம் ஸ்ரீரங்க₃ஶாயிநம்' என்று தனக்கு வசப்பட்டிருக்கும் மூவகைச்சேதநாசேதநங்களின் ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் பரப்₃ரஹ்மமாய், புருஷோத்தமனாய் இருக்கும் ரங்க₃நாத₂னுக்கு வசப்பட்டவை என்று அருளிச்செய்துள்ளார். இதற்கு வ்யாக்யானமிட்ட வேதாந்த தேசிகர்

"ஏவம் ப₄க₃வத: ஸர்வாதா₄ரத்வாதி₃வ்யஞ்ஜநாத் தத₃ந்யேஷாம் சேதநாசேதந த்₃ரவ்யாணாம் தம் ப்ரத்யாதே₄யத்வ விதே₄யத்வ ஶேஷத்வ நியமேந தத₃ப்ருத₂க் ஸித்₃த₄விஶேஷணதயா தச்ச₂ரீரத்வம் ஶ்ருதி ஸித்₃த₄ம் முக்₂யமேவ ஸ்தா₂பிதம் ப₄வதி"

[இவ்வண்ணமாக எம்பெருமான் தன்னைத் தவிர்ந்த மற்ற அனைவர்க்கும் ஆதாரமாக இருப்பவன் முதலான விஷயங்களைத்தெளிவுபடுத்துகையால், அவனைத் தவிர்ந்த மற்ற சேதநாசேதந த்₃ரவ்யங்கள் அனைத்தும் அவனால் தாங்கப்படுவதாய், அவனுக்கு வசப்பட்டதாய், அவனுக்கு சேஷமாகவே எப்போதும் இருக்கின்றனவாகையால், அவனை விட்டுப் பிரியாத விஶேஷணமான ஶரீரமாய் இருக்கின்றன என்று வேத₃ங்களில் முழங்கப்படுவது முக்₂யமானது என்று நிலைநிறுத்தப்பட்டதாகிறது] என்று அருளிச்செய்திருக்கிறார். அதனால் பிராட்டி எம்பெருமானுக்கு ஶரீரமல்ல, அவனால் 'நியமிக்கப்படுபவளல்ல' என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் எம்பெருமானாருடைய திருவுள்ளத்திற்கும் தேசிகனுடைய திருவுள்ளத்திற்கும் மிகவும் முரண்பட்டது என்று விளங்குகிறது. [வி வி 20]

67. க₃த்₃யபா₄ஷ்யத்தில் "அநவதி₄காதிஶய" என்று எம்பெருமானார்-பிராட்டியின் கல்யாணகுணங்களுக்கு விசேஷணமிடுமிடத்தில்

"ஜ்ஞாந பே₄த₃க ஸமாநத்வே நித்யமுக்தேஶ்வரேஷு ச ।
யதா₂ வைஷம்ய நியதிஸ் ததை₂வாத்ரேத்யநாவிலம் ॥"

[நித்ய முக்தர்களுக்கும் ஈஶ்வரனுக்கும் ஜ்ஞானமும் போக மும் ஒத்தவை என்று ப்ரமாணங்கள் முழங்கியபோதிலும் உலகிற்கு மூவகைக் காரணமாயிருக்கை முதலானவை ஈஶ்வரனுக்கே உண்டு என்று [ப்₃ரஹ்மஸூத்ரத்தில்] எப்படி நிலை நிறுத்தப்படுகிறதோ, அப்படியே பெருமாள் பிராட்டி விஷயத்தில் வேறுபாடு நிலைநிறுத்தப் படவேண்டு மாகை யாலே குறையில்லை] என்று தெளிவாகக் காட்டியுள்ளார் தேசிகன். ஆகையால் 'அநவதி₄காதிஶய' என்னும் விசே ஷணம் ஒத்திருப்பதைக் கொண்டு இருவரும் துல்யமான ஈஶ்வரர்கள் என்னும் பஞ்சமபக்ஷவாதம் தேசிகன் திருவுள் ளத்திற்கு அத்யந்த விருத்₃த₄மாகும். [ ஸ்ரீ 130 ]

68. ஸ்தோத்ரரத்னத்தில் ''தயாஸஹாஸீநம்'' [39] என்னும் ஶ்லோக வ்யாக்₂யானத்தில் 'தயாஸஹ பூ₄ம் யாதி₃ பத்ந்யந்தரவதோऽபி ஶ்ரிய: ப்ராத₄ாந்யாத் இஹ தது₃க்தி:। தத₃பேக்ஷயாபி ப₄க₃வத: ப்ராத₄ாந்ய வ்யஞ்ஜநாய ஸஹ ஶப்₃த₃:' [பூ₄மி முதலான மற்ற பத்னிகள் இருந்தபோதிலும் அவர்களுக்குள் ஸ்ரீதேவியே ப்ரத₄ானமானவளாகையால் இங்கு அவளைச் சொல்லுகிறார். அவளைக் காட்டிலும் ப₄க₃வா னுக்கு ப்ராத₄ாந்யம் உண்டு என்று உணர்த்துவதற்காக 'ஸஹ'ஶப்₃த₃த்தைப் பிரயோகிக்கிறார் என்று பிராட்டியைக் காட்டிலும் பகவானுக்கு ப்ராதாந்யம் உண்டென்று தெளி வாக அருளியுள்ளார் தேசிகன். இருவரும் ஒத்தவர் என்று கூறும் பஞ்சமபக்ஷம் அவரால் புறக்கணிக்கப்பட்ட தென்று தேறுகிறது.

69. ரஹஸ்யரத்நாவளியில் பிராட்டியினுடைய புருஷ காரத்வத்தைப் பற்றி விளக்கம் அருளிச் செய்கையில் ''ஸர்வஸ்வாமினியாய் ஸர்வேஶ்வரனுக்கு சேஷபூ₄தையாய் ஸஹத₄ர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்ய அதிஶயத்தாலும் அத்தலையில் வால்லப்₄ய அதி

ஶயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு தஞ்சமாகிறாள்'' என்று அருளியுள்ளார் தேசிகன். ஸர்வஸ்வாமிநியாய் என்று மட்டும் குறிப்பிட்டால் எம்பெருமானுக்கு எப்படிப் பட்ட ஈஶ்வரத்வத்தை இசைகிறோமோ அதைபோலத் தான் இவளுக்கும் என்று எண்ணத் தோன்றும் என்றே அடுத்த வார்த்தையிலேயே ''ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷபூ4தையாய்'' என்று குறிப்பிட்டதோடல்லாமல் ''ஸர்வஶேஷி வ்யதிரிக்த ஸர்வஶேஷித்வம்'' (எல்லோருக்கும் ஶேஷியான எம்பெருமானைத் தவிர மற்ற அனைவர்க்கும் ஶேஷியாயிருக்கும் தன்மை) என்று தொடங்கி ரஹஸ்ய ரத்னாவளிவாக்யம் நான்கில் அருளியுள்ளார் தேசிகன். இதிலிருந்து இருவரும் துல்யமானவர்கள் என்னும் ஐந்தாவதுபக்ஷம் தேசிகனுடைய திருவுள்ளத்திற்கு அப்பாற்பட்டது என்று விளங்குகிறது. [ஸ்ரீ 8, 9]

70. தேசிகன் ''விரோதபரிஹாரம்'' என்னும் ரஹஸ்ய கிரந்தத்தில், ''இப்படி இதரங்களைப் பற்ற இருவருக்கும் வந்த ஏக ரூபமான ஶேஷித்வம் அந்யோந்யம் ஆகார பே4த3த்தாலே வரும் ஸாம்யவைஷம்யங்களுக்கு நிவாரகமல்லாமையால், நித்ய வ்யவஸ்தி2தமான பதித்வ பத்நீத்வங்களுக்கும் த3ண்ட3த4ரத்வ புருஷகாரத்வங்களுக்கும் விருத்தமன்று'' என்று ஸாதித்துள்ளார். ''விரோத பரிஹாரம்'' என்னும் வடமொழி க்ரந்தத்தில் அவர் குமாரரான நாயனாராசார்யஸ்வாமி இதை விளக்கியுள்ளார் பின்வருமாறு:—

''ஏவம் விஶ்வவிஷய—ஶேஷித்வஸ்ய அநௌபாதி4கத்வேऽபி ப4க3வத: ஸர்வஶேஷித்வம் தத் பத்ந்யா: ஶ்ரிய: தச்சே2ஷத்வம் ஈஶ்வரஸ்ய த4ண்ட3த4ரத்வம் தஸ்யாஶ்ச தத் புருஷகாரத்வம், விஶேஷ்ய பூ4தஸ்ய ப4க3வத: ப்ராதா4ந்யம் விஶேஷணபூ4தாயா: தஸ்யா; தத் ஸ்வரூப நிரூபகத்வேந அப்ராதா4ந்யம் இத்யாதி3 ஸர்வம் வ்யவஸ்தி2தம்''

[உலகம் மிதுன சேஷமாயிருப்பதுஇயல்வான போதிலும் பக வானுடைய ஸர்வ சேஷித்வம், அவனது பத்னியான பிராட் டிக்கு ப்ரஸவச் சேஷத்வம், மற்றும் பகவானுடைய தண்டதரத்வம் அதேபோல் பிராட்டியினுடைய புருஷகாரத்வம். விசேஷ்யமாக உள்ள பகவானுக்கு ப்ராதாந்யம், விசேஷண மாகவும் ஸ்வரூப நிரூபக பூதையாகவும் விளங்கும் பிராட்டி க்கு அப்ராதாந்யம் ஆகிற ஆகாரங்கள் இருவருக்கும் தனித் தனியாக அமைந்திருப்பது பொருந்தும்] என்று விளக்கி யுள்ளார். இப்படி தேசிகனாலும் அவரது குமாரராலும் பிராட்டியைக் காட்டிலும் எம்பெருமானுக்குப் பல வகை யான ப்ராதான்யங்கள் அருளிச் செய்யப்பட்டிருக்கை யாலே இருவரும் ப்ரஹ்மங்கள் என்றும், இருவரும் துல்யர் கள் என்றும் கூறும் பஞ்சமபக்ஷம் அவர்களால் கண்டிக்கப் பட்டதாகிறது. [ஸ்ரீ 11]

71. தேசிகன் தமது ப்ரதான சதகம் 14 வது வாக்கி யத்தில் "ஏகரூபமான இச்சேஷித்வம் உபயாதிஷ்டானமா னாலும் தம்பதிகளில் பதிப்ராதாந்யம் லௌகிகவைதிக மர்யாதைகளின்படியே நித்ய நியதமாகையாலே "பதி களுக்கும் பரமனான பதி என்னும்படி நின்ற நாராயணனே ஸர்வ ப்ரதானன்" என்று விவரித்துள்ளார்: எனவே இதற்குமுரணான பஞ்சமபக்ஷத்தை தேசிகன் மீது ஏறிடுவது கண்டனத்துக்குரியதாகும். [ஸ்ரீ.12]

72. தேசிகன் தமது ப்ரதாந ஶதகம் 15 வது வாக்கி யத்தில், "இவனே ப்ருஹத்த்வ, ப்ரும்ஹணத்வங்களுடை யவை எல்லாத்திலும் ப்ரக்ருஷ்டதத்வமாகையாலே பரப்ரஹ்மம் என்றும், ப்ரகாஶகங்கள் தனக்கும் ப்ரகாஶகன் ஆகையாலே 'பரஞ்ஜ்யோதிஸ்' என்றும், ஸர்வாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாகையாலே 'பரமாத் மா' என்றும், தேவதைகள் தங்களுக்கும் ஆராத்யனாகை யாலே 'பரதேவதை' என்றும், முக்தருக்கும் ப்ராப்யான

ப்ராப்யனுகையாலே 'பராகதி' என்றும், முமுக்ஷுக்களுக்கு வசீகரணீய வர்க்கத்தில் ஸீமாவாகையாலே 'பராகாஷ்டை' என்றும், ஸர்வோபாய ப்ரஸாத₃நீய ஸித்₃தே₄பாயனுகையாலே 'பராயணம்' என்றும், ஸித்₃தி₄ஹேதுக்களில் ஸர்வ ஸித்₃தி₄ஹேதுவானகயாலே 'பரமதபஸ்' என்றும், பாவனங்கள் தனக்கும் பாவனத்வசக்தி ப்ரத₃னுகையாலே "பவித்ராணும் பவித்ரம்" என்றும், 'கு₃ஹ்யத்தம்' இத்யாதி₃கள் படியே தன் குணங்கள் முதலான மங்களங்களுக்கெல்லாம் மங்களத்வாவஹனுகையாலே, 'மங்க₃ளாநாஞ்ச மங்க₃ளம்' என்றும் சொல்லும்படி ஸர்வப்ரகாரத்திலும்வரும் ப்ராத₄ன்யங்கள் எல்லாத்தையும் நினைத்து 'லோகப்ரத₄ானன்' என்று சொல்லுகிறது" என்று அருளிச் செய்திருக்கிருர். இதனுல் 13, 14 வது வாக்கியங்களில் எம்பெருமானுடு சேஷித்வத்தில் பங்கு கொள்பவளாக எடுக்கப்பட்ட பிராட்டிக்கு "பரப்₃ரஹ்மம்" "பரஞ்ஜ்யோதிஸ்" "பரமாத்மா" பரதேவதை" "பராக₃தி" 'பராகாஷ்டை" "பராயணம்" "பரமதபஸ்" "பவித்ராணும்பவித்ரம்" "மங்களாநாம் சமங்களம்" "லோகப்ரத₄ானன்" என்கிற இப்பெருமைகள் இல்லை என்றும், இப்பெருமைகள் அனைத்தையும் பெற்றிருக்கும் எம்பெருமான் ஒருவனே "பரப்₃ரஹ்மம்" முதலான சொற்களால் சொல்லப்பட்டிருக்கிருன் என்றும் மிகத்தெளிவாக விளங்குகிறது. ஆகையால் தேசிகன் நாலாவது பக்ஷத்தையே தழுவியவரென்றும், பஞ்சம பக்ஷத்தைப் பலகாததூரம் விலக்கியவரென்றும் அசைக்கமுடியாதபடி நிரூபிக்கப்பட்டதாகிறது.

73. தேசிகன் தம்முடைய ரஹஸ்யத்ரயஸாரத்தில் மூலமந்த்ராதி₄காரத்தில், "நார" ஶப்₃த₃த்தை விளக்கும் போது, "இதிலே தே₃வீ, பூ₄ஷண, ஆயுத₄, பரிஜன, பரிச்ச₂த₃, த்₃வாரபால, பார்ஷத₃ாதி₃ பே₄த₃ங்களும் இங்கே அநுஸந்தே₄யங்கள்" என்று பெரிய பிராட்டியார் முதலான

தேவிமார்களையும் 'நார' ஶப்₃தா₃ர்த்த₂மாக அநுஸந்தித்திருக்கிறார். இதனால் 'நார' ஶப்₃த₃த்தின் பொருளான பெரியபிராட்டியாரை நாராயணன் வியாபித்திருப்பவன் என்றும், த₄ரித்திருப்பவன் என்றும் தேசிகன் திருவுள்ளம் பற்றினார் என்பது தெரிகிறது. இதனால் 'எம்பெருமான் பெரிய பிராட்டியாரை வியாபிக்கமுடியாது. நியமிக்க வில்லை, தரிக்கவில்லை' என்றெல்லாம் கூறும் பஞ்சம பக்ஷம் தேசிகனால் கனவிலும கருதப்படவில்லை என்று தெரிகிறது. இந்த அதி₄காரத்திலேயே மேலே

சேதநாசேதநம் ஸர்வம் விஷ்ணோர் யத்₃வ்யதிரிச்யதே ।
நாரம் தத₃யநம் சேத₃ம் யஸ்ய நாராயணஸ்து ஸ:॥

[விஷ்ணுவைக் காட்டிலும் வேறுபட்ட எல்லாச் சேதநாசேதநங்களும் நாரம் எனப்படுகின்றன. அவற்றை இருப்பிடமாகக்கொண்டவன் நாராயணனாகிறான்.] என்னும் ஶ்லோகத்தாலும், ''நரஸம்ப₃ந்தி₄ நாரம் என்கிற வ்யுத்பத்தியாலே ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களும், நிரூபிதஸ்வரூப விஶேஷண த₄ர்மங்களும், வ்யாபாரங்களும், விக்₃ரஹ விசேஷங்களும், மற்றுமுள்ள த்ரிவித₄ சேதநா சேதநங்களும் எல்லாம் நாரஶப்₃தா₃ர்த்த₂மான போது ஸ்வவ்யதிரிக்த ஸர்வத்துக்கும் ஆஶ்ரயத்வாதி₃ரூபேண நிற்கும் ப்ரகாரம் விவக்ஷிதமாகையாலே ஸ்வநிஷ்ட₂த்வாதி₃களைச் சொல்லுகிறது'' என்னும் வாக்யத்தாலும் இவ்வர்த்த₂த்தை தேசிகன் மிகவும் தெளிவுபடுத்தியிருக்கிறார் என்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

74. ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரதா₄ந ப்ரதிதந்த்ராதி₄காரத்தில், ''ஸர்வவஸ்துக்களுடையவும் ஸத்தை ஸங்கல்பாதீ₄நையாகையாவது—அநித்யங்கள் அநித்யேச்சையாலே உத்பந்நங்களாயும் நித்யங்கள் நித்யேச்சா₂ஸித்₃த₄ங்களாயுமிருக்கை. இவ்வர்த்த₂த்தை 'இச்சா₂த ஏவதவ விஶ்வபதா₃ர்

த்ரு:ஸத்தா' என்கிற ச்லோகத்தாலே அபி₄யுக்தர் விவேசித்தார்கள்'' என்று அருளிச்செய்கையாலே ''இச்சா₂த ஏவ'' என்னும் கூரத்தாழ்வானுடைய ச்லோகத்தை மேற்கோளாகக்காட்டி, பிராட்டியுள்ளிட்ட அனைவருடைய ஸத்தையும் எம்பெருமானுடைய இச்சையினால் விளைந்தது என்று நிரூபிக்கையாலே தேசிகன் இவ்வர்த்த₂த்தை ஏற்றுக்கொள்ளும் நாலாவது பக்ஷத்தையே தழுவியவர் எனவும், இவ்வர்த்த₂த்தைப்புறக்கணிக்கும் ஐந்தாவதுபக்ஷத்தை ஆதரித்தவரல்லர் என்று புலனாகிறது.

75. தேசிகன் ரஹஸ்யத்ரயஸாரம் தத்வத்ரய சிந்தனாதி₄காரத்தில் ''இப்படி ஸ்வாதீ₄ன ஸர்வஸத்தாதி₃களையுடையனாயிருக்கிற ஈச்வரனுடைய ஸ்வரூபம் ஸத்யத்வாதி₃களாகிற ஸ்வரூப நிரூபகத₄ர்மங்களாலே ஸத்யமாய் ஜ்ஞாநமாய், அநந்தமாய், ஆனந்த₃மாய், அமலமாய், இருக்கும்'' என்று எம்பெருமானுக்கு ஸத்யத்வம், ஜ்ஞாநத்வம், அநந்தத்வம், ஆனந்த₃த்வம், அமலத்வம் ஆகிய ஐந்து ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களைக் காட்டுகிறார். இந்த அதி₄காரத்தின் பிற்பகுதியில் ''ஸர்வாவஸ்தை₂யிலும் ஸபத்நீகனாய்க் கொண்டேயிருக்கும்'' என்னும் வாக்யத்தால் ச்ரிய:பதித்வமும் இவனுக்கு ஸ்வரூப நிரூபகத₄ர்மம் என்று காட்டினார். இந்த ஆறு ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களில் ச்ரிய:பதித்வமாகிற ஸ்வரூப நிரூபக த₄ர்மம் ஸ்ரீ தேவிக்குக் கூடாதென்பது வெளிப்படை. ஆகையால் மற்ற ஸ்வரூப நிரூபக த₄ர்மங்களும் அவளுக்கு இல்லை யென்று உணர்த்தப்பட்டது. இதனால் பிராட்டியும் ப்₃ரஹ்மமாகையாலே அவளுக்கும் இந்த ஸ்வரூப நிரூபக த₄ர்மங்கள் உண்டென்று கூறும் பஞ்சம பக்ஷம் தேசிகனால் புறக்கணிக்கப்பட்டதென்று தெரிகிறது.

76. தேசிகன் தமது தத்வத்ரயசுளகம்—ஈச்வர நிரூபணத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:— (1) விபுத்

வேஶஷிசேதநத்வம் (2) அநந்யாதீநத்வம் (3) நிராதா ரத்வம் (4) ஜகத்காரணத்வம் (5) மோக்ஷப்ரதத்வம் (6) ஸர்வாதாரத்வம் (7) ஸர்வநியந்த்ருத்வம் (8) ஸர்வ சேஷித்வம் (9) ஸர்வஶரீரித்வம் (10) ஸர்வ ஶப்தவாச்யத்வம் (11) ஸர்வவேதாந்தவேத்யத்வம் (12)ஸர்வ லோகஶரண்யத்வம் (13) ஸர்வ முமுக்ஷு - உபாஸ்யத்வம் (14) ஸர்வபலப்ரதத்வம் (15) ஸர்வ வ்யாப்தஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்வம் (16) லக்ஷ்மீஸஹாயத்வம் இத்யாதிகளும் இவனுக்கு லக்ஷணங்கள்'' என்று குறிப்பிட்டுள்ளார். இவற் றில் ''லக்ஷ்மீஸஹாயத்வம்'' என்னும் ப்ரஹ்ம லக்ஷணம் பிராட்டிக்குப் பொருந்தாது என்பது வெளிப்படை. ''விபுத்வேஶதிசேதநத்வம்'' என்னும் முதல் லக்ஷணம் ப்ரஹ்ம மாகிற எம்பெருமானுக்கும் அவனுக்கு அடங்கியவளாய் ஈஶ்வரவகுப்பைச் சேர்ந்தவளான பிராட்டிக்கும் பொருந் தும். பிராட்டி எம்பெருமானுக்கு அதீனையாகையாலும் எம்பெருமானை ஆதாரமாகக் கொண்டவளாகையாலும் உலகிற்கு மூவகைக்காரணமாக இராதவளாகையாலும், கோபமென்பதையே அறியாதவளாய், சேதநனுடைய பாபங்களை க்ஷமித்தேன் என்று கூற இயலாதவளாகையா லும் எம்பெருமானுக்கு ஆதாரமாய் நியந்தாவாய் சேஷி யாய் சரீரியாய் அவனைச் சொல்லும் ஶப்தத்தால் சொல் லத் தகாதவளாய், அவனையே பரப்ரஹ்மமாய்க் கூறும் வேதங்களால் சொல்லப்படாதவளாகையாலும் 2 முதல் 11 வரையுள்ள லக்ஷணங்கள் ப்ரஹ்மமல்லாத அவளுக்குப் பொருந்தாது. எம்பெருமானை இவள் வ்யாபிக்காதவளா கையாலே 15 வது லக்ஷணமும் இவளுக்குப் பொருந்தாது. ஶரண்யத்வம், உபாஸ்யத்வம், பலப்ரதத்வம் ஆகியவற் றில் தேசிகனுடைய திருவுள்ளப்படி இவள் அப்ரதானமாக அந்வயிக்கிறுளாகையாலே 12, 13, 14 லக்ஷணங்கள் ப்ரஹ்ம மான எம்பெருமானுக்குப் ஈஶ்வரகோடியில் சேர்ந்தவளாக மட்டும் இருக்கும் இவளுக்கும் பொதுவான லக்ஷணங்

களாகும். இதனால்தான் இந்த எல்லா லக்ஷணங்களையும் ஒன்றாக எடுத்து "இவனுக்கு லக்ஷணங்கள்" என்று இந்த லக்ஷணங்கள் எல்லாம் பொருந்துவது எம்பெருமானுக்கு மட்டுமே என்று காட்டினார் தேசிகன். இதனால் தேசிகன் தாம் நாலாவது பக்ஷத்தையே அங்கீகரித்தவர் என்பதையும்' ஐந்தாவது பக்ஷத்தை அறவே ஒதுக்கித்தள்ளியவர் என்பதையும் உணர்த்தினார்.

77. ஸ்ரீதேசிகன் ரஹஸ்யத்ரயஸாரத்திலே பரிபூர்ண ப்₃ரஹ்மாநுப₄வாதி₄காரத்தில் "ஈச்வரனுக்குச் சத்ரசாமராதி₃களைப்போலேலக்ஷணமாகச்சொன்ன - ஜக₃த்₃காரணத்வ — மோக்ஷப்ரத₃த்வ — ஸர்வாதா₄ரத்வ — ஸர்வநியந்த்ருத்வ — ஸர்வசேஷித்வ — ஸர்வசரீரித்வ ஸர்வசப்₃த₃வாச்யத்வ — ஸர்வவேத₃வேத்₃யத்வ — ஸர்வலோகசரண்யத்வ — ஸர்வமுமுக்ஷூபாஸ்யத்வ — ஸர்வ ப₂லப்ரத₃த்வ — ஸர்வவ்யாப்தஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபத்வ — லக்ஷ்மீஸஹாயத்வாதி₃கள் ப்ரஸித்₃தங்கள்" என்று அருளிச்செய்தார். இதிலே சக்ரவர்த்திக்கு சத்ர சாமராதி₃களைப்போலே ப்₃ரஹ்மத்துக்கே உரிய லக்ஷணங்களைக் கூறும்போது லக்ஷ்மீஸஹாயத்வத்தோடுகூட மற்ற லக்ஷணங்களைப் படிக்கையாலே 'லக்ஷ்மீஸஹாயத்வமாகிற லக்ஷணம் எப்படிப் பெரியபிராட்டியாருக்குக் கூடாதோ அதுபோலவே மற்ற ப்₃ரஹ்மலக்ஷணங்களும் பெரிய பிராட்டியாருக்குக் கூடாது' என்று காட்டியுள்ளார் தேசிகன். இதன் மூலம் பிராட்டிக்கு ப்₃ரஹ்மத்வம் உண்டென்று கூறும் பஞ்சம பக்ஷத்தைப் பிடரிபிடித்துத் தள்ளிவிட்டார் தேசிகன்.

78. ரஹஸ்யத்ரயஸாரம் மூலமந்த்ராதி₄காரத்தில் திருமந்த்ரத்தில் ப₄க₃வத் ஸ்வரூபத்திற்கு 108 அஸாதா₄ரண குணங்களைக் கூறியிருப்பதைக் காட்டுகிறார் தேசிகன்.

அனைத்துக்கும் உபாதா3நமாயிருக்கை, நிமித்தமாயிருக்கை முதலான பரப்3ரஹ்மலக்ஷணங்களெல்லாம் இதில் அடங்கியுள்ளன. அத்துடன் த3ண்டத4ரத்வம் (தண்டனை அளிப்பவனாயிருக்கை). ஸர்வாவஸ்த2ல‍க்ஷ்மீ ஸஹசரத்வம் (எல்லா நிலைகளிலும் ல‍க்ஷ்மியைத் துணையாகக் கொண்டிருக்கை) என்னும் இரு குணங்களை யெடுக்கையாலே இந்த ப்3ரஹ்ம லக்ஷணங்கள் பெரிய பிராட்டியாருக்கு அறவே பொருந்த மாட்டா எனக் காட்டுகிறார். இதிலிருந்து அவர் நாலாவது பக்ஷத்தையே தழுவியவர் என்றும் ஐந்தாவது பக்ஷத்தை நினைத்துக்கூடப் பார்க்காதவர் என்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறது.

79. தேசிகன் தம்முடைய அமலனாதிபிரான் வ்யாக்யானமான 'முநிவாஹன போக'த்தில் 'ஆதி' என்னும் பதத்தை விவரிக்கும் போது 'ஸர்வஜக3தே3க காரண பூ4தன்' என்று உலகிற்குக் காரணமாக இருப்பவன் இவன் ஒருவனே என்று காட்டி, ''காரணத்வமும் மோக்ஷப்ரத3த்வமும் சா2த்ர சாமரங்கள் போலே ஸர்வலோக ஶரண்யனுக்கு விஶேஷ சிஹ்நங்கள்'' என்று சொல்லுவதன் மூலம், 'பிராட்டியுள்ளிட்ட ஸர்வ லோகத்திற்கும் ஶரண்யனான ப்3ரஹ்மம் எம்பெருமான் ஒருவனே' என்று நிலைநாட்டினார். ஆகையால் இரண்டு ப்3ரஹ்மங்கள் என்று கூறும் பஞ்சம பக்ஷம் தேசிகரால் புறக்கணிக்கப்பட்டது என்று விளங்குகிறது.

80. 'முநிவாஹன போக'த்தில் ஐந்தாம் பாட்டில், 'திருவாரமார்பு' என்ற விடத்திற்கு உரையெழுதும் போது, ''ஸ்வாமித்வ காஷ்டையையுடையரான பெருமாளுடைய ஶேஷித்வ பூர்த்திக்கு லக்ஷணமான திருவையும்'' என்று அருளிச் செய்வதன் மூலம் பிராட்டிக்கு ஏகோநஶேஷித்வமே உண்டு என்றும், அவளையுள்ளிட்ட ஸர்வ சேதனர்க்கும் ஶேஷியாயிருக்கும் ஶேஷித்வ பூர்த்தி பெருமாளுக்கு மட்டுமே உள்ளது என்றும் காட்டுவதன் மூலம், இருவரும் துல்யர் என்னும் பஞ்சமபக்ஷத்தைப் புறமுதுகிட்டு ஓடச் செய்கிறார் தேசிகன்.

## திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள்

பிள்ளான், நஞ்ஜீயர், நம்பிள்ளை திருவடிகளான பெரிய வாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான திவ்யப்ரபந்த வ்யாக்யாதாக்கள் நூற்றுக் கணக்கான இடங்களில் பிராட்டியினுடைய இயல்வான பூகுவச் சேஷத்வத்தையும், எம்பெருமானுடைய ஸர்வ ஶேஷித்வத்தையும், ஸர்வ ஜகச்சரீரித்வத்தையும் ஸகலஜகத்தேக காரணத்வத்தையும் முழங்கியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் எடுப்பதாயின் 'ஶததூஷணி' ஸஹஸ்ரதூஷணியாய் விரியும். ஆகையால் 'ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறுபதம்' என்னும் ரீதியிலே ஒருசில இடங்களைக் காட்டுகிறோம்.

### பிள்ளான்

81. பிள்ளான் திருவாய்மொழி 1—1—7 வ்யாக்யானத்தில் நூற்றுககணக்கான ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களை ப்ரமாணமாகக்காட்டி, "பத்த முக்த நித்ய ஸித்த த்ரிவித சேதநரிற் காட்டிலும் விலக்ஷண ஜ்ஞாநாநந்தாமல ஸ்வரூபனாய், ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந அபரிமித குண விபூதிகனாய், அகிலபுவந நிர்மாண த்ராண ஸம்ஹராதி லீலாவிநோதனாய், ஸர்வஜகதாத்மாவாய், ஸர்வ ஜகச்சரீரனாய், ஸ்வத ஏவ அகர்மவஶ்யனாகையாலே ஸ்வ ஶரீரபூத சேதநாசேதநாத்மக ஸமஸ்தவஸ்துகத ஸுக துக்க விகாராதி ஸர்வதோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாய் இருந்த பரமபுருஷன்"— என்று ஸகல ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலும் சொல்லப்பட்ட பரப்ரஹ்மத்திற்கு உள்ள பெருமைகளையெல்லாம் உடையவன் பரமபுருஷன் ஒருவனே என்று காட்டினார். "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீ: அநபாயிநீ" என்னும் விஷ்ணு புராண ஶ்லோகத்தை ப்ரமாணமாக எடுப்பதன் மூலம் என்றும் இவனை விட்டுப் பிரியாத ஶ்ரீதேவியும் விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவள்

என்று காட்டினர். இதனல் 'இரண்டு பிரம்மங்கள்' என்று கூறும் ஐந்தாவது பக்ஷம் பிள்ளான் கனவிலும் கருதாதது என்று தேறுகிறது.

82. திருவாய்மொழி 10—10—2 "உன்திரு மார்வத்துமாலை நங்கை வாசம் செய் பூங்குழலாள்" என்னும் பாசுரத்திற்கு உரையெழுதுகையில், "உனக்கு நிரவதிக ஸம்பத்தாய் நிரவதிக போக்ய பூதையாய் உன்னாலும் பஹுமந்தவ்யையாய் உன் திருமேனிக்கு வாசம் செய்யா நின்ற அழகிய திருக்குழல்களையுடையளாயிருந்த பெரிய பிராட்டி திருவாணை" என்று அருளிச் செய்வதன் மூலம் பிராட்டி எம்பெருமானுக்குச் செல்வமாகவும் போக்யப் பொருளாகவும் இருப்பவள் என்று காட்டினர் பிள்ளான். பிராட்டியின் இந்த ஸ்வாபாவிக சேஷத்வத்தை அழிக்கும் பஞ்சம பக்ஷம் இதனல் புறக்கணிக்கப்பட்டது.

## நஞ்சீயர்

83. திருவாய்மொழி 4—8—2 ஒன்பதினுயிரப் படியில் '[பணிமானம் பிழையாமே] அடிமைகொள்ளுமிடத்தில் பெரிய பிராட்டியாரோடு ஒக்க என்னை அடிமை கொள்ளுவதும்செய்து' என்று அருளிச்செய்வதன் மூலம் பெரிய பிராட்டியாருக்கும் சேஷியாய் ஸ்வாமியாய் இருப்பவன் எம்பெருமான் என்று காட்டினர் நஞ்ஜீயர் பிராட்டியின் இயல்வான இந்த பகவச் சேஷத்வத்தை மறுக்கும் பஞ்சமபக்ஷம் நஞ்ஜீயரால் புறக்கணிக்கப்பட்டமை இதிலிருந்து விளங்குகிறது.

84. திருவாய்மொழி 10—10—2 ஒன்பதினுயிரப்படியில் "'விஷ்ணோ: ஸ்ரீ:' என்னும்படியே உனக்கு ஸம்பத்தாய், உன் திருமார்வுக்கு அலங்காரமான மாலையாய், உன்னாலும் ஶ்லாகிக்கப்பட்டவளாய், உன் திருமேனிக்குப் பரிமளத்தைப் பண்ணா நின்றுள்ள அழகிய திருக்குழலையுடைய பெரிய ராட்டியாருடைய ஆணை" என்று அருளிச் செய்வதன்

மூலம் பிராட்டி பெருமானுக்குச் செல்வமாய் அத்யந்த பர தந்த்ரையாய் இருப்பவளென்று காட்டினர். இதனல் நஞ்ஜீய ராலும் பஞ்சம பக்ஷம் பிடரிபிடித்துத் தள்ளப்பட்டதென்று விளங்குகிறது. இத்தகைய நஞ்ஜீயர் மேல் பஞ்சமபக்ஷக்கருத் துக்களை இடைச் செருகல்செய்து ஒரு பொய்யான ஸ்ரீஸூக்த பாஷ்யத்தைக் கற்பித்தது அவருக்குச் செய்த மிகப் பெரிய துரோகமாகும்.

## நம்பிள்ளை ஈடு

85. ஈடு 1—5 - 5 "மானேய் நோக்கி மடவாளை மார்பில் கொண்டாய் மாதவா" என்னும் பாசுரத்திற்கு உரை- "அருளுகைப்பாரும் அருகே உண்டாயிருக்க எனக்கு அருளாய் என்று ப்ரார்த்திக்கவேண்டுகிறதென்?" என்று அமைந்துள்ளது. இதிலிருந்து மோக்ஷத்தை அருளும் உபாயம் எம் பெருமானே என்றும், அவனை அருளும்படி செய்யும் புருஷகாரத்வமே பிராட்டிக்கு உள்ளதென்றும் தேறுகிறது. இருவரும துல்யமான உபாயம் என்று கூறும் பஞ்சம பக்ஷம் இதனல் பிடரி பிடித்துத் தள்ளப்பட்டது.

86. ஈடு 2 - 5 2 "திருவுடம்பு வான் சுடர்......திருவிடமே மார்வம், அயனிடமே கொப்பூழ்" என்னும் பாசுரத்திற்கு அவதாரிகையிடுகையில், "தன் உடம்பைப்பற்றிப்₃ரஹ்மேசாநாதி₃கள் ஸத்தையாம்படி இருக்கிறவன் தான் என் உடம்பைப் பற்றித் தன் ஸத்தையாம்படியிரா நின்ருன் என்கிருர்" என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது இங்கு 'ப்₃ரஹ்மருத்₃ரர்களோடு ஒக்கப்பிராட்டியின் ஸத்தையும் எம்பெருமானுக்கு, அதீனம் என்கையால் பிராட்டி ஸ்வதந்த்ரை என்னும் பஞ்சம பக்ஷம் நம்பிள்ளையால் புறக்கணிக்கப்பட்டது. நஞ்ஜீயர் ஒன்பதிணுயிரப்படியும் இப்படியே உள்ளது.

87. ஈடு 3-7-8 "நம்பனை" என்னும் பாட்டில், "(ஞாலம் படைத்தவனை) தனக்குத் தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசித₃விசேஷமாய்க் கிடக்கிற தசையிலே

புருஷார்த்தோபயோகியான ஶரீரத்தை உண்டாக்கின வனை. அது ஆருக்கு ப்ரியமாக? என்னில்—(திருமார்பனை) அவளுக்கு ப்ரியமாக" என்று அருளிச்செய்திருக்கிறார் நம்பிள்ளை. இதிலிருந்து உலகைப்படைப்பவன் எம்பெரு மானே என்றும், அந்த லீலையில் பங்கு பெறுகையாகிற அப்ரதானமான அந்வயமே பிராட்டிக்கு உண்டு என்றும் விளங்குகிறது. இதிலிருந்து பிராட்டியும் முக்யமான ஜகத்காரணம் என்னும் பஞ்சமபக்ஷம் நம்பிள்ளையின் திரு வுள்ளத்திற்கு அப்பாற்பட்டது என்று விளங்குகிறது.

88. நம்பிள்ளை ஈடு 3-10-8 "அல்லிமலர் மகள்போக மயக்குகள் ஆகியும் நிற்கும் அம்மான் எல்லையில் ஞானத் தன் ஞானம் அஃதே கொண்டு எல்லாக்கருமங்களும் செய் எல்லையில் மாயனை" என்னும் பாசுரத்திற்கு உரையிடு கையில், "தன்னுடைய ஆனந்தத்துக்கு மேலே ஶ்ரிய: பதி த்வத்தால்வந்த ஆனந்தத்தையுடையனாயிருக்கும்.(அம்மான்) ஆனந்தமயனாய் ஶ்ரிய:பதியாமவனிறே ஸர்வேஶ்வரன். (எல்லையில் ஞானத்தன்) "மநஸ்வீ" என்னுமாபோலே, ப்ரணயதாரையில் அவளுக்கும் ஆனைக்குக் குதிரைவைக்க வல்ல ஜ்ஞாநாதிக்யத்தையுடையவன். (ஞானம் அஃதே கொண்டு இத்யாதி) தானும் அவளுமான சேர்த்தியிற் பிறந்த வெளிச்சிறப்பே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான ஸாதநமாகக் கொண்டு, இக்கார்ய ஜாதத்தையெல்லாம் உண்டாக்குமாயிற்று" என்று அருளிச்செய்கிறார் நம்பிள்ளை. இதிலிருந்து (1) "ஶ்ரிய:பதியாமவனிறே ஸர்வேஶ்வரன்" என்கையாலே ஸ்ரீதேவிக்கு ஸர்வேஶ்வரத்வம் இல்லை என்று விளங்குகிறது (2) அவளைக்காட்டிலும் மிகுந்த ஜ்ஞா நத்தையுடையவன் எம்பெருமான் என்று விளங்குகிறது. (3) அந்த ஜ்ஞாநமே எம்பெருமான் உலகைப்படைப்ப தற்கு வேறு எந்தத் துணையையும் எதிர்பாராத ஸாதநம் என்று விளங்குகிறது. இவற்றிலிருந்து பெருமானைப்

போலே பிராட்டியும் முக்₁ய ஜக₃த்காரணம் என்னும் பஞ்சமபக்ஷம் நம்பிள்ளையின் திருவுள்ளத்திற்கு அப்பாற்பட்டதென்று விளங்குகிறது.

89 ஈடு 4-5-11 ''வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே'' என்னும் பாசுரத்திற்கு உரையிடும்போது ''ஸர்வேச்வரன் ப₂லம் கொடுக்கிற தசையிலே அவனை விலக்கி 'நானே இதுக்கு ப₂லங்கொடுக்கவேணும்' என்று தனக்கு ப₄ரமாக ஏறிட்டுக்கொண்டு ப₂லம் கொடுக்கும்'' என்று அருளிச்செய்வதன் மூலம், மோக்ஷ ப₂லன் கொடுக்கும் அதி₄காரம் எம்பெருமானுக்கே உள்ளது என்றும் இத்திருவாய்மொழியைக் கற்றவர்கள் மீதுள்ள உகப்பின் மிகுதியாலே பிராட்டி அவனை விலக்கி ப₂லப்ரத₃த்வத்தைத் தான் ஏறிட்டுக்கொண்டு தானே பலன் கொடுப்பாள் என்றும் காட்டுகிறார். இதிலிருந்தும் மோக்ஷப₂ல ப்ரத₃த்வமான உபாயத்வம் எம்பெருமானுக்கே உரியது என்றும் உகப்பின் மிகுதியாலே பிராட்டி இத்திருவாய்மொழியைக் கற்றவர்கள் விஷயத்தில் தான் அதை ஏறிட்டுக் கொள்கிறாள் என்றும் விளங்குகிறது. ஆகையால் எம்பெருமானுக்கு நிகராகப் பிராட்டிக்கும் இயல்வான மோக்ஷோபாயத்வத்தைச் சொல்லும் பஞ்சமபக்ஷம் நம்பிள்ளையால் ஆதரிக்கப்படவில்லை என்று தெளிவாகத் தெரிகிறது.

90 ஈடு 4-8-1 ''ஏறாளும் இறையோனும் திசை முகனும் திருமகளும் கூறாளும் தனி உடம்பன்'' என்னுமிடத்திற்கு வ்யாக்₂யானம் செய்கையில் ''தி₃வ்யாத்ம ஸ்வரூபத்திலும் வீறுடையது திருமேனியிறே. ஸர்வாபாச்ரயமாயிறே திருமேனிதான் இருப்பது'' என்று அருளியிருக்கிறார் நம்பிள்ளை. இதிலிருந்து ப்₃ரஹ்ம ருத்₃ராதி₃களைப் போலவே பிராட்டிக்கும் புகலிடமாயிருப்பவன் எம்பெருமான் என்று விளங்குகிறது. அவளை ஸ்வதந்த்ரையாகப் பேசும் பஞ்சம பக்ஷம் இதனால் தள்ளப்பட்டது.

91. ஈடு 4-8-5 "தளிர்நிறத்தால்" என்னும் பாட்டில் "தனிச்சிறையில்" என்னும் பதத்திற்கு உரையிடும் போது, "ப்ரபை₄யையும் ப்ரப₄ாவானையும் பிரித்துவைத்தாற் போலேயிருப்பதொன்றிறே ராக்ஷஸீமத்₄யத்தில் நிருத்₃தை₄யாயிருந்தபடி" என்று உரையிடுகிறார் நம்பிள்ளை. இதிலிருந்து ப்ரப₄ாவானைப்போலே எம்பெருமான் ஆதாரமாய் இருப்பவன் என்றும், ப்ரபை₄யைப்போலே பிராட்டி அவனால் ஸத்தைபெற்றவள் என்றும் காட்டுகிறார். இதனால் பிராட்டியை ஸ்வதந்த்ரை என்னும் பஞ்சம பக்ஷம் தள்ளப் பட்டது.

92. நம்பிள்ளை ஈடு 6-10-10 "அகலகில்லேன்" என்னும் பாட்டிற்கு உரையிடுகையில் "ப்ரபை₄ ப்ரப₄ாவானுக்கு சேஷமாய் நின்றே அத்தலைக்கு நிறங்கொடுக்குமா போலவும், பரிமளம் புஷ்பத்துக்கு சேஷமாய் நின்று பெருவிலையாக்குமா போலவும், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யம் குலையாதே பரதந்த்ரனுமா போலேயுமிறே இவளும் அத்தலைக்கு அநந்யார்ஹ சேஷமாய்க்கொண்டே நிறங்கொடுக்கும் படி" என்று அருளிச் செய்திருக்கிறார், இதனால் பெருமாளைக் குறித்துப் பிராட்டியின் அநந்யார்ஹ சேஷத்வம் உறுதிப் படுத்தப்பட்டது; இதை மறுக்கும் பஞ்சம பக்ஷம் வெகு தூரம் விலக்கப்பட்டது.

93 நம்பிள்ளை ஈடு எட்டாம் பத்து முதல் திருவாய் மொழி ப்ரவேசத்தில் 'இவர் தாம் ஸர்வேஶ்வரன் பக்கல் தமக்குத்தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டு ஸ்வப₄ாவத்தை: - ஆஶ்ரித பரதந்த்ரனாய் இருக்கும் இருப்பையும் ஸ்வைஶ்வர்யத்திரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் தனக்குப் ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய், இவற்றுக்கு வந்த வ்யஸநம் தனக்கு வந்ததாக நினைத்திருக்கும் ப்ராப்தியை யுமாயிற்று" என்று அருளிச்செய்கிறார். இதிலிருந்து பிராட்டிமார் தொடங்கியுள்ள எல்லாச் சேதநாசேதநங்

களும் எம்பெருமானுக்கு ப்ரகாரமென்றும் அவனே ஸமஸ்தவஸ்து ப்ரகாரி என்றும் மிகத் தெளிவாகக் காட்டினார் நம்பிள்ளை. இதனால் ஒரு மிதுநமே ப்ரகாரி என்னும் பஞ்சமபக்ஷம் அவரால் வெகுதூரம் விலக்கப்பட்டதென்று விளங்குகிறது.

94. ஈடு 9-2-1 "'பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு" என்னும் பாசுரத்திற்கு உரையிடுகையில் '(பங்கயத்தாள் திருவருளும்) — உன்னருளின் ஸ்வாதந்த்ர்யகந்தத்தைத் தவிர்க்கும் அவள் அருளும்படியாகவன்றோ வந்தது. அவள் அருள் அவன் ஸ்வாதந்த்ரியத்தைப் பின்செல்லாதபடி பண்ணுமாயிற்று. 'அவனுடைய பாரதந்த்ர்யம் ப்ராணயித்வமன்றோ; நிலை நிற்குமோ? ஸ்வாதந்த்ரியமேயன்றோ ப்ரக்ருதி?' என்று அஞ்சவேண்டா; அவளருகேயிருக்க ஸ்வாதந்த்ரியம் ஜீவியாது. ஆகையிறே, முற்கூற்றால் அவள் புருஷகாரமாகப் பற்றுகிறது" என்று அருளியுள்ளார் நம்பிள்ளை. இதிலிருந்து ஸ்வாதந்த்ரியம் எம்பெருமானுக்கே இயல்வான குணம் என்றும், ஆனால் அது பிராட்டி ஸந்நிதியில் நிலை நில்லாது என்றும், அதனாலேயே அவள் புருஷகாரயாகப் பற்றப்படுகிறாள் என்றும் மிகத்தெளிவாக விளங்குகிறது. இதனால் பெருமானைப்போலே பிராட்டிக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை ஏறிடும் பஞ்சமபக்ஷம் பிடரிபிடித்துத் தள்ளப்படுகிறது.

95. ஈடு 10-10-2 "'உன் திரு" என்னுமிடத்திற்கு உரையருளும் போது, "விஷ்ணோ:ஸ்ரீ: " என்னும் ப்ரமாணத்தைக் காட்டி எம்பெருமானுக்குச் செல்வமாகவும் சேஷபூதையாகவும் இருக்கிறவள் பிராட்டி என்று விளக்கி, "'திருவுக்கும் திரு" [பெரிய திரு 7-7-1] முதலான ப்ரமாணங்களால் எம்பெருமான் அவளாலும் ஆஸ்ரயிக்கப்படுபவனாயிருக்கையால் அவனுக்குரிய ப்ராதாந்யத்தைக்காட்டி "ஸ்ரத்தயா தேவ:" முதலான ப்ரமாணங்களைக்கொண்டு இவள் அவனுக்குப் பெருமை அளிப்பவளாகையாலே,

இவளுக்குள்ள ப்ராதா₄ந்யத்தையும் காட்டி ''ஆதா₄ரப்ரதா₄நமாயிருத்தல்; ஆதே₄ய ப்ரதா₄நமாயிருத்தல். ஆதே₄யத்துக்கு ஆதா₄ரத்தையொழிய ஸத்தையுமில்லை; நிரூப்யத்துக்கு நிரூபகத்தையொழிய ஸ்வரூப ஸ்தி₂தியில்லை; ஒன்றை யொன்றொழியில் ஸ்வரூபஸித்₃தி₄யில்லை'' என்று அருளிச் செய்தார் நம்பிள்ளை. இதிலிருந்து எம்பெருமான் அஹமர்த்த₂மாய், தனக்கு ஆதா₄ரமாய் இருப்பவன் என்றும், தான் அஹந்தையாய் அவனுக்கு நிரூபகையாய்இருப்பவள் என்றும் லக்ஷ்மீதந்த்ரத்தில் பிராட்டி உரைத்தபடி எம்பெருமான் பிராட்டிக்கு ஆதா₄ரமாகையாலே அவனுக்கு ப்ராதா₄ந்யம் என்றும், ஆதே₄யமான மணம் ஆதா₄ரமான புஷ்பத்திற்குச் சிறப்பையளிப்பதுபோலே பிராட்டி பெருமானுக்குச் சிறப்பையளிக்கையாலே ஆதே₄யமான இவளுக்கும் ஒருவகையில்ப்ராதா₄ந்யம் உண்டுஎன்றும் காட்டினார் நம்பிள்ளை. பிராட்டிக்கு எம்பெருமான் ஆதா₄ரம் என்பதை மறுக்கும் பஞ்சமபக்ஷத்தை இதன் மூலம் வெகு தூரம் விலக்கினார் நம்பிள்ளை.

## ச்ருதப்ரகாசிகாசாரியர்

96. ''எம்பெருமானுக்கு ஒத்தவரும் மிக்கவரும் இல்லை'' என்று முழங்கும் ச்ருதி ஸ்ம்ருதிகளையும் 'நேஹநாநாஸ்தி கிஞ்சந'' [ப்₃ரஹ்மத்துக்கு ஸமமான ப்ரகாரி வேறு இல்லை] முதலான ஸ்ருதி ஸ்ம்ருதிகளையும் அனுஸரித்து ''ஸகல சேதநாசேதந ப்ரகாரியாயிருக்கும் ப்₃ரஹ்மம் ஒன்றே'' என்று ச்ருதப்ரகாஸிகாசாரியர் ஜிஜ்ஞாஸாதி₄கரண ஸ்ருத ப்ரகாசிகையில் நிர்ணயிக்கிறார். ''ந ஹி ப்₃ரஹ்மவ்யதிரிக்தஸ்ய கஸ்யசித் ஸமஸ்த சித₃சிச்சரீரகத்வ ஸம்ப₄வ:'' [ப்₃ரஹ்மத்தைத் தவிர்ந்த வேறொரு சேதநனுக்கு எல்லாச் சேதநாசேதநங்களையும் சரீரமாகக்கொண்டிருக்கும் தன்மை ஒட்டாதன்றோ] என்று இதை ஸ்தாபிக்கிறார் ச்ருதப்ரகாசிகாசார்யர். இதுவே ப்ரஹ்மாத்வைதமென்றும்ப்ரகார்யத்வைதம்என்றும்

சொல்லப்படும். இதனை தேசிகன் உள்ளிட்ட ஸகல பூர்வாசார்யர்களும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை முன் பாராக்களில் காட்டினோம். இதிலிருந்து பெருமாளும் பிராட்டியுமாகிற இருவரும் ப்₃ரஹ்மம் அல்லது துல்யர் என்று கொள்ளும் பஞ்சமபக்ஷம் ச்ருதப்ரகாசிகாசாரியர் முதலான ஸகல பூர்வாசாரியர்களாலும் பிடரிபிடித்துத் தள்ளப்பட்டது என்று விளங்குகிறது. [ஸ்ரீ 62]

97. ச்ருதப்ரகாசிகையில் ''அகி₂லபு₄வந' என்னும் முதல் மங்க₃ள ச்லோகத்தை விவரிக்கும்போது ''ஏவம் ஜக₃த்காரணத்வ மோக்ஷ ப்ரத₃த்வே கதி₂தே! ஏதே ஹி ராஜ்ஞ: சூ₂த்ர சாமரவத்₃ ப்₃ரஹ்மணோ அஸாத₄ாரணம் சிஹ்நம்'' [மங்களஸ்லோகத்தில் முதல் இரண்டு பாதங்களால் ஜக₃த்காரணனாயிருக்கையும், மோக்ஷமளிப்பவனாயிருக்கையும் சொல்லப்பட்டது. இவ்விரண்டுமேயன்றோ அரசனுக்கு குடை சாமரங்கள்போலே வேறு எவருக்கும் ஆகாதவையாய், ப்₃ரஹ்மம் ஒன்றிற்கே உரிய அடையாளங்கள்] என்று அருளிச்செய்தார் ஸுதர்சனபட்டர். இதனால திருவுடைய தேவனை ஸ்ரீநிவாஸனுக்கு உள்ள பெருமையை திருவுக்குமாக்கும் பஞ்சமபக்ஷத்தை அவர் ஏற்றுக்கொள்ளவில்லையென்று விளங்குகிறது.

## யுக்திகள்

98. ஆளவந்தார் தொடக்கமாக தேசிகன், மணவாளமாமுனிகள் ஈருகவுள்ள நம்முடைய பூர்வாசார்யர்களுடைய க்ரந்தங்கள் நூற்றுக்கணக்கில் இப்போதும் கிடைக்கின்றன அவற்றில் எந்தப் பூர்வாசார்யரும் பிராட்டியை ப்₃ரஹ்மமென்றோ எம்பெருமானோடு துல்யமான ஈஸ்வரி என்றோ. அவளை எம்பெருமான் வ்யாபிக்கவோ நியமிக்கவோ முடியாதென்றோ ஓரிடத்தில் கூடக்கூறவில்லை. ஆகையால், இப்படியெல்லாம் கூறும் பஞ்சமபக்ஷம் ஸகல பூர்வாசார்யர்களாலும் ஏற்றுக்கொள்ளப்படாதவொன்று என்று விளங்குகிறது.

99. பாஞ்சராத்ரம் வைகாநஸம் முதலான ஆகமங்களைக் கொண்டு ப்ரதிஷ்டை செய்விக்கப் பெற்ற வைணவத் திருக் கோயில்கள் நம்நாட்டில் இன்றும் ஆயிரக்கணக்கில்உள்ளன. அவை அனைத்திலும் பெருமாளுடைய விக்ரஹத்தைக் காட்டிலும் பிராட்டியின் விக்ரஹம் அளவில் சிறியதாகவே அமைந்துள்ளது. பெருமாளுடைய உத்ஸவங்களைக் காட்டிலும் பிராட்டியின் உத்ஸவங்கள் வைபவத்தில் குறைந்தவையாகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆகமங்களிலும் இந்நிலை மிகத் தெளிவாக உள்ளது. இவற்றிலிருந்து அநாதி காலமாக நம் நாட்டிலுள்ள ஆகம ஶாஸ்த்ரகாரர்களும மக்களும் எம்பெருமான் ஒருவனையே பரப்ரஹ்மமாகக் கருதினார்கள் என்றும், பெரிய பிராட்டியாரை அதற்கு அடுத்த ஸ்தானத்திலேயே வைத்தார்கள் என்றும் விளங்குகிறது. இவற்றிலிருந்து இருவரையும் துல்யராக்கும் பஞ்சமபக்ஷம் ஆகம ஶாஸ்த்ரங்களுக்கும் ஆலயங்களின் அமைப்பிற்கும் நடைமுறைக்கும் மிகவும்முரண்பட்டதென்று விளங்குகிறது.

100 பிரஸித்தமான விஷ்ணுவாலயங்களுக்கு ஸ்தல புராணங்கள் பல அமைந்திருக்கின்றன. இவையனைத்தையும் ப்ராமாணிகமாகக் கொள்ள இயலாவிடினும் ஆழ்வார்கள் ஆசார்யர்கள் ஆதரித்த சிலவற்றை ப்ரமாணமாகக் கொண்டே தீரவேண்டும். கோயில் திருமலை பெருமாள் கோயில் ஸ்தல புராணங்களை ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஆதரித்திருக்கிறார்கள் என்பது ப்ரஸித்தம். திருவெள்ளறை பற்றியும் ஒரு ஸ்தலபுராணம் உள்ளது. அதில் சிபிச் சக்கரவர்த்தி முதன்முதலில் 3700 பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ பிராம்மணர்களை காடாய்க் கிடந்த சோழநாட்டிலுள்ள இவ்வூரில் குடியேற்றினன் என்று சொல்லப்படுகிறது. சோழதேசத்திற்கு முதன் முதலில் வந்தவர்களாகையாலே இந்த ஸமூகத்தினர் இன்றும் 'சோழியர்கள்' என்று சிறப்புப் பெயர் பெற்றுவிளங்குகின்றனர். ''தினவுகெடச்சொல்லுவன் திருவெள்ளறைச் சோழியன்'' என்று ஒரு பிரசித்தமான வச

ணமும் அஸ்மத்குல கூடஸ்தரான எங்களாழ்வானைப் பற்றி வழங்குகிறது. சோழ தேசத்து மன்னர்களும் தாங்கள் சிபிச் சக்ரவர்த்தியின் மரபில் வந்தவர்களாகையால் தங்களைச் செம்பியன் என்று அழைத்துக் கொண்டதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுவதும் இந்த ஸ்தலபுராணத்தை வலியுறுத்துவதாய் உள்ளது. "ஆதி திருவெள்ளறை" என்னும் [இந்தப் பிராந்தத்திலுள்ள] பொது ஜனங்களின் வழக்கும் இதை வலியுறுத்துகிறது. இந்த ஸ்தலபுராணம் பின்வருமாறு கூறுகிறது:—பெரியபிராட்டியார் பரமபதத்தில் எம்பெருமானிடம் தனக்கு ஆதிபத்யம் தரவேண்டுமென்று பிரார்த்தித்ததாகவும், அதற்கு எம்பெருமான் "அகல் விசும்பும் நிலனும் ஆகிய உபய விபூதியையும் நான் வீற்றிருந்து செங்கோல் செலுத்தும் இடமான இங்கு அதை உனக்கு அளிக்க இயலாது. திருவெள்ளறையில் சென்று தவம் செய்வாய். அங்கு உனக்கு ஆதிபத்யம் அளிக்கிறேன்" என்று அருளினான். அதன்படியே பங்கயச் செல்வியாகிற பிராட்டி இங்குள்ள பூங்கிடங்கிலிருந்து தவம் செய்ததாகவும் எம்பிரான் ப்ரத்யக்ஷமாகி அவளுக்கு ஆதிபத்யத்தை அளித்ததாகவும் ஸ்தலபுராணம் கூறுகிறது. இதன்படி புறப்படும் காலங்களில் தாயார் பெருமாளுக்கு முன்பாகப் பல்லக்கில் எழுந்தருளுவது முதலான பெருமைகள் தாயாருக்குக் காணப்படுகின்றன. இந்த ஆதிபத்யம் ஆழ்வார்கள் காலத்திலிருந்தே இருந்து வருகிறது என்பதைப் பெரியாழ்வார் தம் பாசுரத்தில் உணர்த்தியிருக்கிறார். திருவெள்ளறைப் பதிகத்தின் இறுதியில் "போதமர் செல்வக் கொழுந்து புணர் திருவெள்ளறையானை" [பெரியாழ் திரு 2—8—10] என்று அருளுகிறார் பெரியாழ்வார். இவ்விடத்திற்கு வ்யாக்யானம் செய்த மணவாள மாமுனிகள், "(போதமர் செல்வக் கொழுந்து) .... பங்கயச் செல்வி என்றிறே திருநாமம். [புணர் திருவெள்ளறையானை] அவள் தாமரைப்பூவை மறந்து, 'அகலகில்லேன்' என்கிறபடியே

க்ஷணகாலமும் பிரியமாட்டாதே நித்ய ஸம்ஶ்லேஷம் பண்ணும்படியாய்க் கொண்டு திருவெள்ளறையிலே நிற்கிறவனை தேடல் தேடியோடுங் கொழுந்தது' என்கிறபடியே கொழுந்தானதொன்று, உபக்,நத்தை (கொள்கொம்பை) யொழிய தரிக்கமாட்டாதாற்போலேயாய்த்து போதமர் செய்யக்கொழுந்தான இவளும் திருவெள்ளறையானாகிற உபக,நததோடே புணர்ந்தல்லது தரிக்கமாட்டாதபடி. உபக்,நம ஆதா,ரமாய் நிற்கும் மாத்ரமாய், அதின்மேலே படர்ந்த கொடியே ப்ரதா,நமாயிருக்குமாபோலேயாய்த்து, செந்தாமரைக் கண்ணர் அப்ரதா,நராய், இவளே அவ்வூருக்கு ப்ரதா,நையாயிருக்கும்படி'' என்று அருளிச் செய்தார். இதிலிருந்து கொள்கொம்புபோலே பிராட்டிக்கும் ஆதா,ரமாய் ப்ரதா,நமாயிருப்பவன் எம்பெருமானே என்றும், அக்கொள்கொம்பின் மேல் படர்ந்த கொடி போலே ஸேவிப்பவர்களுக்கு ப்ரதா,நமாய் ஸேவை ஸாதிப்பவள் பெரிய பிராட்டியேயாகையாலே எம்பெருமானால் அளிக்கப்பட்ட ப்ராதா,ந்யம் பெரியபிராட்டியாருக்கும் உள்ளது என்றும் பெரியாழ்வார் திருவுள்ளம் பற்றியிருக்கிறார் என்று விளங்குகிறது. நாச்சியார்கோயில் பற்றியும் "பெண்ணரசு நாடு" என்று பட்டர் ஸாதித்த ரீதியில் நாச்சியாருக்கு ப்ராதா,ந்யம் விளங்குவதும் இத்தகையதே. ஸ்ரீவில்லிபுத்தூரில் பூமிப்பிராட்டியின் அவதாரமான ஆண்டாளுக்கு இத்தகைய ப்ராதா,ந்யம் விளங்கி வருவதை நாம் அனைவரும் கண்டுகளிக்கிறோம். இவையனைத்தும் பிராட்டிமார்க்குள்ள கு,ணம் அழகு முதலானவற்றிலுள்ள ப்ராதா,ந்யம் எம்பெருமானுடைய நித்ய ஸங்கல்பத்தால் அளிக்கப்பட்டது என்னும் உண்மையை உணர்த்துபவையாய் இருக்கின்றன. ஆகையால் ஆழ்வார்கள் ஆசார்யர்களால் ஆதரிக்கப்பட்ட ஸ்தல புராணங்களும் பெருமாள் பிராட்டி ஆகிய இருவரும் பரப்,ரஹ்மங்கள் என்று கூறும் பஞ்சமபக்ஷத்தை அறவே ஒதுக்கித்தள்ளுகின்றன.

# முடிவுரை

இதுவரை பஞ்சம பக்ஷத்தின் மேல் நூறு தூஷணங்கள் காட்டப்பட்டன. ச்ருதி ஸ்ம்ருதி முதலானவற்றை மேலும் உட்புகுந்து ஆராய்ந்தால், ஆயிரக்கணக்கில் தூஷணங்கள் சொல்ல இடமுண்டு.

'ஸாக்ஷாத் ஸ்வாமி' என்பவர் 'ஸ்ரீதத்வ ஸித்தாஞ்ஜனம்' என்னும் நூலிலும், திருப்புட்குழி அப்பாஸ்வாமி ந்யாயஸித்தாஞ்ஜந வ்யாக்யானமான 'ரத்ன பேடிகை'யிலும், அஹோபிலமட பீடாதிபதிகள் சிலர் தம் நூல்களிலும், இவற்றை அனுஸரித்து ஸ்ரீதத்வ ஸித்தாஞ்ஜந ஸங்க்ரஹம் முதலான சிறு சுவடிகளிலும், ஸ்ரீதத்வ தீபிகை முதலான கட்டுரைகளிலும் நவீன வித்வான்களும் பிராட்டிக்குப் பெருமாளோடு துல்யமான ஈச்வரத்வத்தையும் ப்ரஹ்மத்வத்தையும் வலிந்துவாது செய்து ஸ்தாபிக்க முயன்றது ஸ்ரீதத்வஸர்வஸ்வத்தாலும் இந்த சததூஷணியாலும் "சின்னாபின்னம்" என்கிற ரீதியிலே தலையெடுக்கமுடியாதபடி நிரஸிக்கப்பட்டது என்பது நடுநிலையாளர்க்கு நன்குவிளங்கும். சுமார் இருநூறு வருடங்களாகவே நிலவிவரும் இத்தகைய வாதங்கள், பூர்வாசார்யர்களுக்குப் பிற்பட்ட காலத்தில் ஏற்பட்ட வாதப்ரதிவாதங்களின் விளைவாகவே எழுந்தவை. வாதப்ரதிவாதங்களின் உச்சநிலையில், ப்ரமாணங்களும் பூர்வாசார்ய ஸூக்திகளும் தங்கள் கொள்கைக்கு முரண்பட்டிருப்பதைக் கருத்தில் கொள்ளாமல் தர்க்கபாண்டித்யத்தாலே வாதத்தில் எப்படியாவது வெற்றி கொள்ளவேணும் என்னும் எண்ணத்தால் எழுதப்பட்டன இந்த நூல்கள் என்பது நடுநிலையாளர்க்கு நன்குவிளங்கும். ஆகையால் ஸாராஸாரவிவேகம் அறிந்தவர்களாய் மாத்ஸர்யமற்றவர்களாய், ப்ரமாண பரதந்த்ரர்களாய் உபயஸம்ப்ரதாயத்திலும் விளங்குகின்ற, விளங்கப்போகிற, இக்கால வருங்காலப் பெரியோர்கள் "முதல் பக்ஷமே பிராட்டி விஷயமாகத் தென்னாசார்ய ஸம்ப்ரதாய பூர்வாசார்யர்களின் திருவுள்ளம்" என்றும் "நாலாவது பக்ஷமே ஸ்ரீதேசிகன் திருவுள்ளம்" என்றும் உணர்ந்து, பரஸ்பரஹிம்ஸைதவி களாய், சகிப்புத்தன்மையுடன் வாழ்ந்து "ஸகல சேதநாசேதந விசிஷ்டனாய் ச்ரிய:பதியான நாராயணன் ஒருவனே பரப்ரஹ்மம்" என்னும் வேதாந்த விழுப்பொருளை மக்களிடம் பரப்பி, விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை வளர்க்க வேண்டுமென்று ப்ரார்த்தித்து இந்தப் 'பஞ்சமபக்ஷ சததூஷணி'யை நிறைவு படுத்துகிறோம்.

**பஞ்சமபக்ஷ சததூஷணி நிறைவுற்றது.**

களில் கலந்துகொண்டும், பல தேசிக ஸம்ப்ரதாய வித்வான்களிடம் நேரிலும் கடிதங்கள் மூலமும் ப்ரார்த்தித்தும் கடந்த சிலவருடங்களாக முயன்றோம். இது பலனளிக்காமல் போகவே "விசிஷ்டாத்வைதமா விசிஷ்டத்வைதமா" என்னும் கட்டுரையில் தேசிகன் காட்டிய ஐக்யவாதபக்ஷமே அவருடைய பக்ஷமென்று கொண்டால், அது விசிஷ்டத்வைதமேயாகும் என்று விளக்கி நடுநிலையாளர்களின் தீர்ப்பையும் கோரியிருந்தோம். தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் உள்பட பலரும் நம்முடைய கருத்தினை ஏற்றுக்கொண்டு தீர்ப்புகளை வழங்கினார்கள். இந்நிலையில் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்திரிகை இவ்வாதத்தில் நுழைந்து கடந்த பல மாதங்களாக நம்முடைய பெயரையும் குறிப்பிடாமல் பல விதண்டாவாதங்களைச் செய்து விவாதத்தை இழுத்தடித்து வந்தது. நாம் நம்முடைய கட்டுரைகளையும் நடுநிலையாளர்களின் தீர்ப்புகளையும் "ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்" என்னும் 200 பக்கங்கள் கொண்ட நூலாக வெளியிட்டு, தங்களால் விமர்சிக்கப்படும் நூல் அதுவே என்றும், அது ரூ 30 விலையில் நம்மிடம் கிடைக்கும் என்றும் ப்ரியாவில் அறிவிக்குமாறு கேட்டுக்கொண்டிருந்தோம். இதையும் செய்ய ப்ரியா இப்போது மறுக்கிறது. அடியேனுடைய ஸ்ரீதத்வஸர்வஸ்வத்தைக்கண்டு உகந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்வாமி வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி "விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷகர்" "ஸ்ரீதத்வ நிர்த்தாரகர்" என்னும் இருவிருதுகளை அடியேனுக்கு அநுக்ரஹித்து உண்மையை வெற்றி பெறச்செய்திருக்கிறார். இது இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளது. இந்நூலையும் ப்ரியாவுக்கு அனுப்பி, தபால்செலவு ரூ 1 அனுப்புவோருக்கு ரூ 10 விலையுள்ள இந்த நூலை ப்ரியாவாசகர்களுக்கு நாம் இலவசமாக அனுப்புவதாக ப்ரியாவில் அறிவிக்கும்படி கேட்டுக் கொண்டோம். இதன்படி ப்ரியா செய்தால் தேசிகன் பக்ஷம் [illegible] அறிய [illegible] என்பது ப்ரியா வாசகர்களுக்கும் விளங்கும். 'ஸத்யமேவ ஜயதே' (உண்மையே [illegible]) [illegible] [illegible] இவ்விஷயத்திலும் [illegible] [illegible].

ஸ்ரீ [illegible]

[illegible]

# ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்

நாதமுனிகள், ஆளவந்தார், ஸ்ரீபாஷ்யகாரர், அவருடைய ஶிஷ்ய ப்ரஶிஷ்யர்கள், ஸ்ரீவேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகள் முதலான ஸகல பூர்வாசார்யர்களும் — உலகனைத்தையும் ஸ்ருஷ்டித்துக்கொண்டவனும், அவற்றை வியாபித்து நியமித்து ஶேஷியாயிருக்கும் பரப்ரஹ்மம் நாராயணன் ஒருவனே என்றும், நம்மைப்போன்ற ஜீவர்களை அவனோடு சேர்ப்பிக்கும் புருஷகார பூதையாய் நின்று பெரிய பிராட்டியார் அவனுக்குக் கீழ் அடுத்த ஸ்தானத்தைக் கொள்கிறாள் என்றும் தம் நூல்களில் நூற்றுக்கணக்கான இடங்களில் முழங்கியுள்ளனர். தென்னாசார்யர்கள் இரண்டு ஈஸ்வரர்களை ஒப்புக்கொள்வது ப்ரமாணங்களோடு முரண்படுமாகையாலே பெரியபிராட்டியையும் ஜீவகோடியிலேயே சேர்க்க வேண்டுமென்று திருவுள்ளம் பற்றினர். தேசிகன் "பெரிய பிராட்டியார் ஈஶ்வரனைத் தவிர்ந்த மற்ற உலகுக்கு ஶேஷியாய் ஸ்வாமினியாய் இருக்கையாலும் அவ்வுலகங்களனைத்தையும் வியாபித்திருக்கையாலும், ஜகத்காரணத்வ ப்ராப்யத்வ ஶரண்யத்வங்களிலே அவனுக்கு அந்தரங்கமான அன்வயம் உண்டாகையாலும் அவள் ஈஶ்வரவகுப்பில் சேர்க்கத்தக்கவளே. அவளுக்கும் ஈஶ்வரனாய் அவளை வியாபித்து நியமிப்பவனான நாராயணனே பரப்ரஹ்மம். அவனுக்கு அடுத்த ஸ்தானத்தில் உள்ள இவள் ஈஶ்வரவகுப்பில் சேர்க்கத்தக்கவளே" என்று திருவுள்ளம் பற்றினார். சுமார் இருநூறு ஆண்டுகளுக்குள்ளிருந்த தேசிக ஸம்ப்ரதாய வித்வான்களில் சிலர், 'பெருமாளும் பிராட்டியும் ஆகிய இருவரும் பரப்ரஹ்மங்களே' என்றும், மற்றும் சிலர் 'அவள் பரப்ரஹ்மம் ஆகாத போதிலும் துல்யமான ஈஶ்வரியே' என்றும் வாதம் செய்து தம் நூல்களில் எழுதிவந்தனர். இதைத் தென்னாசார்யர்களான பட்டர் நஞ்ஜீயர் பேரிலும் ஏற்றிட்டனர். இந்த விஷயத்தை ஸமாதானமான முறையில் ஆராய்ந்து தென்னாசார்யர்கள் தேசிகன் காட்டியிருக்கும் நாலு பக்ஷங்களில் முதல் பக்ஷத்தையே கைக்கொண்டவர்கள் என்றும், தேசிகன் தாம் காட்டியிருக்கும் நாலாவது பக்ஷத்தையே கைக்கொண்டார் என்றும் பல ப்ரமாணங்களை எடுத்துக்காட்டி இதை அனைவரும் ஏற்றுக்கொண்டால் 'ஸர்வேஶ்வரனான ப்ரஹ்மம் ஒருவனே' என்னும் விசிஷ்டாத்வைதத்திற்கு ஊறு விளையாமலிருக்கும் என்று நாம் அஹோபிலமட ஸதஸ்ஸுக்

ரேப்பர் — 3 ல்





## முக்கியமான குறிப்பு

இந்நூலிலுள்ள ஒவ்வொரு தூஷணத்தின் இறுதியில் அடைப்புக் குறிகளுக்குள் உள்ள எண்கள் 'ஸ்ரீதத்வஸர்வஸ்வம்' நூலின் பக்கங்களைக் குறிக்கின்றன. எழுத்துக்களின் விளக்கம் பின் வருமாறு.

வி. வி. — விசிஷ்டாத்வைதமா? விசிஷ்டத்வைதமா?

ஸ்ரீ — ஸ்ரீதத்வ ஸர்வஸ்வம்

விசிஷ்டாத்வைத ஸம்ரக்ஷணக் கட்டுரைப் பக்கங்களும் உள்ளன. இவையடங்கிய ஸ்ரீதத்வ ஸர்வஸ்வத்தில் இந்த தூஷணங்களுக்கு மேலும் விளக்கம் காணலாம்.